"நான் ஒரு டீச்சர்
நான் அணியும் ஆடைகள் என் லட்சியத்தைப் போதிக்க வேண்டும், இல்லையா."

உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி



MF-30 TAM

**ம:பத்லால்**
**:பேப்ரிக்ஸ்**



சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், புடவைகள், மற்றும் துணிகள்
மற்றும் டெனிம்கள்.

**ம:பத்லால் இண்டஸ்ட்ரீஸ்** நியூ ஷொர்ராக் மில்ஸ் **ம:பத்லால் :பைன்**

# நேர்முகப் பேட்டி: துணைவன்

நேர்முகப் பேட்டிகள் ஒரு கண். துடைப்பு என்பதால் சிபாரிசு இல்லாதவர்கள் குறைந்த பட்சம் சுடச்சுட வாகவாவது பதில் சொல்லி தங்களைத் திருப்திப் படுத்திக் கொள்ளலாம். அவர்கள் உபயோகத்திற்காகப் பிரபல எழுத்தாளர் ஏகாம்பரம் தயாரித்துள்ள நேர்முகபேட்டித் துணைவன் புத்தகத்திலிருந்து சில பகுதிகள்...



சில கேள்வி—பதில்கள்

கே: ராமசுப்பிரமணியன்... உட்காருங்க நீங்கதான் ராமசுப்பிரமணியன்

ப: சேச்சே. நான் ராமசுப்ரமணியன் இல்லே. அவனோட பாட்டி.

கே: நீங்க தமிழ் பி.ஏ.வா? வெரி குட். நீங்க என்ன இலக்கியம் படிச்சிருக்கீங்க, தமிழ்லே?

ப: ஷெல்லி, மில்டன், கீட்ஸ் ஆகியவர்கள் எழுதியதை.

கே: இங்கிலீஷைத் தமிழ்லே படிச்சீங்களா?

ப: நான் சரித்திரத்தையே நியூ மேத்ஸ்லே படிச்சிருக்கிறேனே.

கே: மிஸ்டர்... இது பேட்டி. கன்னு பின்னுவென்று நீங்க பேசக் கூடாது.

ப: சரி. நான் அப்படிப் பேசல்லே. நீங்களே அப்படிப் பேசுங்க.

கே: நீங்க எந்த ஊர்?

ப: தம்பூர்.

கே: ஷார்ட் ஹாண்ட் தெரியுமா?

ப: தெரியும். கடிகாரத்தில் பெரிய முள் சின்ன முள் என்று இருக்கும். சின்ன முள்தான் ஷார்ட் ஹாண்ட்.

கே: இப்போ மணி என்ன?

ப: மூன்று ஜாமம் ஏழு நாழிகை இருபது குளிகை.

கே: என்னய்யா குளிகை, தளிகை?

ப: நான் தமிழ் பி.ஏ. தட் ஈஸ் ஒய் ஐ டோல்ட் யூ தி டைம் இன் டமில்.

கே: சரி. இங்கிலீஷ் டைம் என்ன?

ப: விடிகாலே நாலரை?

கே: என்னது?

ப: ஆமாம். இப்போது இங்கிலீஷ் நாட்டிலே அதுதான் டைம்.

கே: இங்கிலீஷ் டைம் இருக்கட்டும்; உன் டைம் என்ன?

ப: இன்ஸஃபிஷியண்ட் டைம். அதாவது போதாத காலம்!

கே: சரி, ஏ என்பவன் ஒரு வேலையை ஏழு நாளில் செய்கிறான். பி என்பவன் அதே வேலையைப் பதினாலு நாளில் செய்கிறான்.

ப: அதெப்படி முடியும்! ஏதான் ஏழு நாளில் அந்த வேலையைச் செய்து முடித்துவிட்டானே?

கே: கணக்கைப் பூரா கேளுங்க... இவர்களில் யாரைத் திறமைசாலி என்று தேர்ந்து எடுப்பீர்கள்? ஏன்?

ப: 'ஏ'யைத் தேர்ந்தெடுப்பேன். 'ஏ' என்று கேட்டாலே வசூல் என்னமா ஆகிறது தெரியுமா? 'ஏ'யின் மேல் எல்லோருக்கும் அட்ராக்ஷன்.

கே: விமானக் கம்பெனி வேலைக்காக வந்திருக்கும் உங்களுக்கு இந்தத் துறையில் முன் அனுபவம் உண்டா?

ப: உண்டு. சின்ன வயதில் தும்பியைக் கயிற்றில் கட்டிப் பறக்க விட்டிருக்கிறேன். அப்புறம் காற்றாடி பறக்க விட்டிருக்கிறேன்!

கே: இதெல்லாம் பறக்கிற அனுபவமா?

ப: சின்ன வயதில் 'அம்மா சாதம்!' 'அம்மா மிட்டாய்', 'அம்மா புதுச் சட்டை' என்று நான் கேட்கும்போதெல்லாம், அம்மா ''இந்தப் பிள்ளை என்னமாய்ப் பறக்கிறது!'' என்று சொல்வார்கள். அந்த வயதிலேயே பறந்தவன் நான்!

கே: உங்களுக்கு இந்த வேலையில் எவ்வளவு சம்பளம் எதிர்பார்க்கிறீர்கள்?

ப: லஞ்சம் வாங்கக்கூடிய வேலையாக இருந்தால் ஆயிரம் ரூபாய். இல்லாவிட்டால் இரண்டாயிரம் ரூபாய்.

கே: வெரி குட். நீங்க போகலாம்.

ப: மானேஜிங் டைரக்டரின் மருமகன் மிஸ்டர் அச்சு பிச்சு வெளியே காத்திருக்கிறார். அவரை அனுப்பட்டுமா?

கே: அனுப்புங்கள். அவரைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?

ப: இன்றைய பேட்டிக்குப் பிறகு அவர் வேலைக்குத்தேர்ந்தெடுக்கப்பட்டதாகநேற்றே அவருக்குக் கடிதம் வந்திருப்பதிலிருந்து தெரிந்து கொண்டேன். குட் பை!

— பி. எஸ். ஆர்.


மறுபடியும் ஃபெய்லா?... எப்போ தான் பாஸ் பண்ணி என் மானத்தைக் காப்பாத்தப் போறீங்க?
மக்கள்


மத்திய அரசு


ஒண்டியா சுமக்கறேன்! ஆனா இறங்க உட்டா அவ்வளவு தான்!
அடப்பாவி! எனக்கு முன்னாடி போயிட்டியே!
காங் (அ)


காங் (இ)


சேட்டு! சும்மா சொல்லக்கூடாது! எதிர்பார்த்ததை விட பணத்தை அள்ளி அள்ளிக் கொடுக்கறே! மகராசனா இரு!
அ.தி.மு.க அரசு
மக்கள் நலன்




அனிதா

தமிழக அரசு சாராயக் கடை ஏலத்தில் செய்துள்ள சாதனைகளைப் பத்திரிகைகள் பறை சாற்றுகின்றன. சென்னை கொத்தவால் சாவடிப் பகுதியில் மட்டுமே ஒரு சாராயக் கடை மாதம் ஒன்றுக்கு ரூ. 3,11,511க்கு ஏலம் போயிற்று. ஆக, அந்த ஒரு கடைக்காரர் தாம் நஷ்டப்படாதிருக்கக் குறைந்தபட்சம் மாதம் ஒன்றுக்கு மூன்றே கால் லட்சம் ரூபாய் லாபம் காண வேண்டும். இந்த லாபம் காண எத்தனை லட்சம் மதிப்புள்ள சாராயம் அந்தக் கடையில் வியாபாரமாக வேண்டும்! யோசித்துப் பாருங்கள். அந்த அளவுக்கு அந்த வட்டாரத்தில் ஏழைகள் பரம ஏழைகள் ஆவார்கள். அந்த அளவுக்கு அந்த வட்டார மக்கள் அறிவையும் ஆரோக்கியத்தையும் இழப்பார்கள். இவ்வாறே தமிழகம் முழுவதும் வளர்கின்ற ஏழைமையையும் தமிழர்கள் இழக்கின்ற அறிவு, ஆரோக்கியத்தையும் மதிப்பிட்டுப் பார்த்துப் பொன்மனச் செம்மல் பெருமைப்படலாம்!

● ● ●

● சாராயக் கடை ஏலச் செய்திக்கு மேலேயே இன்னொரு செய்தி: குடி போதையில் இருந்த மொராதாபாத் போலீஸார் இருவர், தமாஷுக்காக ஒரு பதினாறு வயதுச் சிறுவனைச் சுட்டுக் கொன்று விட்டனர்!

● ● ●

● சாரதாச் சட்டம் என்பதாக ஒன்று நம் நாட்டில் உள்ளது. அது சாரதா அம்மையார் உருவாக்கியது என்று யாராவது எண்ணியிருந்தால் தயவு செய்து அந்தக் கருத்தை மாற்றிக் கொள்வார்களாக.

ஹரிபிலாஸ் சாரதா என்ற ஆண்மகன் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே குழந்தைக் கல்யாணங்களும் பால்ய விதவைகளும் என்ற இரட்டைக் கொடுமைகளை ஒழிக்க இந்த மசோதா கொணர்ந்து நிறைவேறக் கண்டார். 1978ல் வயது வரம்பு மேலும் உயர்த்தப்பட்டது. பெண்களுக்கு 18 ஆண்களுக்கு 21 என்று நிர்ணயிக்கப்பட்டது. மக்கள் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது இதன் நோக்கம்.

இவ்வாறு இயற்றப்பட்ட சட்டங்களைக் காக்க வேண்டியவர்களே மீறினால் யாரிடம் போய் முறையிடுவது? ராஜஸ்தான் மாநிலத்தில் அமைச்சர் நாராயணலால், ஏப்ரல் மாதம் தமது இரு பெண்களுக்குத் திருமணம் செய்தார். அவர்களில் ஒருத்திக்கு வயது பதின்மூன்றுதான். தம் தாயாரின் விருப்பத்துக்கு விரோதமாய்த் தம்மால் நடந்துகொள்ள முடியாததால் தாம் தவறுசெய்துவிட்டதாகக் கூறும் நாராயணலால், அமைச்சர் பதவியிலிருந்து ராஜிநாமாச் செய்துள்ளார்.

ராஜஸ்தானில் மட்டுமின்றி உத்தரப் பிரதேசத்திலும் குழந்தைக் கல்யாணங்கள் வெகு சகஜமாய் நடக்கின்றன. ஆனால் வோட்டிலேயே குறியாக இருக்கும் ஆட்சிபீடங்கள் சட்டத்தைத் தீவிரமாக அமல்படுத்தி மக்களின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொள்ளத் தயாராக இல்லை! அறியாமையால் தவறு செய்யும் மக்களைத் தொடர்ந்து அந்த அறியாமையில் மூழ்கிக் கிடக்க அனுமதிக்கின்றன. பதவி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## கல்கத்தாவில் பாரதி

கல்கத்தாவில் 'பாலிக்கஞ்' பகுதியில் உள்ளது 'Lake Road', தமிழ் சங்கம் அதாவது பாரதி தமிழ் சங்கம் முயற்சியால் அது 'Bharathi Sadhan' என்று பெயர் மாற்றம் பெற்றிருக்கிறது. கூடிய விரைவில் பாரதி சிலையும் நிறுவப்பட இருக்கிறது. 'தகவல் : கல்கத்தா மிக்கி'



கல்கத்தா லேக் ரோடானது, தமிழ் மன்ற முயற்சியால் கவிபாரதி சரணியாகப் பெயர் மாற்றப்பட்டுள்ளது. இந்தச் சாலை ஆறு கி.மீ. நீளமுள்ளது. மன்றத்தின் செயலாளர் கா. சு. மணி, தமிழரின் வாழ்த்துக்குரியவராகிறார்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஆசை என்பது எவ்வளவு பொல்லாத விஷயம் பாருங்கள்!

● ● ●

● மீனாட்சிபுரம் சென்று வந்த ஆர்ய சமாஜ ஆய்வுக்குழு, அங்கு ஏராளமான ஹரிஜனங்கள் முஸ்லிம் மதத்தைத் தழுவியதற்குக் காரணம், அயல் நாட்டுப் பணமும் வற்புறுத்தலுமே என்றது.

ஆனால் மத்திய அரசின் பிரதிநிதியாகச் சென்ற கே. ஆறுமுகம் நடத்திய விசாரணைப்படி ஹரிஜனங்களை ஜாதி இந்துக்கள் கொடுமைப்படுத்தியதுதான் ஒரு கூட்டமாக ஹரிஜனங்கள் மதம் மாறக் காரணம்!

ஒன்றுக்கொன்று முரண்பாடான அறிக்கைகள் என்றாலும் இரண்டிலுமே உண்மை இருக்கலாம். மத மாற்றத்துக்கு ஹரிஜனங்கள் வற்புறுத்தப்பட்டிருந்தாலும் ஜாதி இந்துக்களிடம் கொடுமைப்பட்டிருக்கவில்லையெனில் அவ்வளவு சுலபமாகப் பெருவாரியாக மதம் மாறியிருக்கமாட்டார்கள். இதற்கு மறுபுறமாக, என்னதான் ஜாதி இந்துக்களிடம் கொடுமைப்பட்டிருந்தாலும், தூண்டுதலும் ஆசை காட்டலும் இன்றி ஒட்டுமொத்தமாக ஒரே சமயத்தில் நூற்றுக் கணக்கானவர் மதம் மாறியிருக்க மாட்டார்கள்.

இரண்டுமே அருவருப்பான அம்சங்கள். வெறுத்து ஒதுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள்.

● ● ●

● அந்த நாள் நவாப் ராஜமாணிக்கம் நாடகத்தில் இரண்யகசிபுவாக நடிப்பார் 'நவாப்' சூரிய சந்திராதி தேவர்களை வரிசையாக நிற்க வைத்து, ''வான்னு வரணும்; போன்னு போகணும்; நில்லுன்னு நிக்கணும்; உட்காருன்னா உட்காரணும்!'' என்று அதட்டுவார். அதற்கேற்ப தேவர்களாக வேஷம் போட்டவர்கள் நடிப்பார்கள். அவையோர் அவர்கள் அவஸ்தையைக் கண்டு சிரிப்பார்கள்.

அப்படித்தான் இன்று அரசு அதிகாரிகளைச் சிரிப்புக்கு இடமாக்கும் வகையில் அரசியல்வாதிகள் ஆட்டிப் படைக்கிறார்கள். ஸி.பி.ஐ. ஆனாலும் சரி, ஸி. ஐ. டி. ஆனாலும் சரி ஆட்சிக்கு வரும் அரசியல்வாதியின் தாளத்துக்கு ஏற்ப ஆட வேண்டும்.

வெவ்வேறு கட்சியினர் பதவிக்கு வரும் போது அவர்கள் போடும் வித்தியாசமான தாளத்துக்கு ஏற்ப ஆடுவது மட்டுமல்ல; ஒரே கட்சி, அதே தலைவர், சந்தர்ப்பத்துக்கு ஏற்ப மாற்றிப் போடுகிற தாளத்துக்கும் ஈடு கொடுத்து ஆட வேண்டியிருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் நீதி நிலைக்கும், உண்மைகள் வெளிவரும் என்ற நம்பிக்கை மக்களுக்கு அறவே இல்லை.

கருணாநிதி குற்றவாளியா இல்லையா என்பதைவிட முக்கியமான விஷயம் இது.

# டிக்கெட் இல்லாத நாடகங்கள்

சவான் அவர்களுக்கு, பொதுஜனம் எழுதிக் கொண்டது.

''நான் கட்சி மாறலே, வீடு திரும்பறேன்''னு நீங்க கூறியதாகப் பத்திரிகையிலே படிச்சதிலேருந்து உங்களுக்கு எழுதணும்கிற ஆவலை என்னால் கட்டுப் படுத்திக்க முடியலேங்க!

கிறிஸ்துவர்களின் வேத நூலாகிய பைபிளிலே உங்களைப் போலவே ஒருத்தன் வீடு திரும்பறான். ஆனா ஒரு வித்தியாசம். அவன் மெய்யாலுமே மனம் வருந்தித் திருந்தி வரான். அவனை வரவேற்ற தந்தை, ''நான் இழந்து விட்டதாக நினைச்ச மகனைத் திரும்பப் பெற்றேன்''னு சொல்லுறார். விருந்து வைக்கிறார்.

ஆனா நீங்க கட்சியை விட்டு விலகியதும் சுயநலத்துக்காகத் திரும்ப வந்து சேருவதும் சுயநலத்துக்காக. அதனால்தான் உங்களை இழந்த போதும் இந்திரா காங்கிரஸ் அவ்வளவா வருந்தலே; இப்ப திரும்ப வந்து சேரும்போதும் ஓஹோன்னு மகிழலே!

இந்த மாதிரி சுயநல அரசியலைக் கடந்த பல வருஷங்களாகவே நாங்க ரொம்பப் பார்த்துப்புட்டோமுங்க.

ஆமா,...தெரியாமத்தான் கேட்கேன், ஆட்சியிலிருந்தா அகப்பட்டதைச் சுருட்டலாம்; எதிர்க் கட்சியிலிருந்தால் என்னத்த பிரயோசனம்கிற மாதிரியா ஒரு மனப்பான்மையை வளர்த்துக் கிட்டே போனா இங்கே ஜனநாயகம் எப்படிங்க உருப்படும்? 'எதிர்க் கட்சியில் இருக்கிறது பெருமை; அதுக்கு ஜனநாயகத்திலே முக்கியமான பொறுப்பும் பணியும் உண்டுங்கிற மனோபாவம் எப்பங்க வளரப் போவுது? இத்தனை நாள் எதிர்க் கட்சியில் இருந்தீங்களே, அதுக்கு ஒரு மதிப்பும் மரியாதையும் ஏற்படற மாதிரி உழைச்சுப் பாடுபட்டிருக்கக் கூடாதா? எதிர்க் கட்சிகள் எல்லாம் ஒரு குறைந்த பட்ச செயல் திட்ட அடிப்படையில் ஒருங்கிணைந்து உழைக்க வழி செய்திருக்கலாமில்லே?

ஏங்க, அக்கரைச் சீமையிலே எதிர்க்கட்சியில் 'நிழல் மந்திரி சபை'ன்னு ஒண்ணு அமைப்பாங்களாமே, வாஸ்தவமா? அதிலே இடம் பெறுகிற அமைச்சர்கள், தங்களுக்கு ஒதுக்கப்படுகிற இலாக்காவைப் பொருத்தமட்டில் எல்லாப் பிரச்னைகளையும் நன்றாக ஆராய்ந்து பார்ப்பாங்களாம். ஆள்கின்ற அமைச்சர்களுக்கு யோசனை சொல்வாங்களாம். அவர் தவறு செய்தால் தட்டிக்கேட்கப் புள்ளி விவரங்கள், விஷய ஞானங்களுடன் தயாராயிருப்பாங்களாம். கேட்கக் கேட்க மகிழ்ச்சியாவும் வியப்பாவும் இருக்கே! ஏங்க, அதுபோல இங்க ஏன் நடக்கக் கூடாது?

ஹூம்...அதுக்கெல்லாம் இங்கே ஏது நேரம்? அடுத்தாப்பல யார் காலை வாரி விடலாம், எந்தக் கட்சிக்குத்தாவி ஆதாயம் தேடலாம்னுதான் யோசனை பண்ணுவாங்களே யொழிய பிரச்னைகளையா ஆராயப் போறாங்க?

சுயநலத்தை மறந்து தேச நலனை நெனைச்சா, எதிர்க் கட்சியிலிருந்த படியே எவ்வளவோ சிறப்புப் பணியாற்றலாமுங்களே! ஒரு நல்ல வாய்ப்பை — மக்களின் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய ஒரு நல்ல எதிர்கட்சியை உருவாக்கி ஜனநாயகப் பணியாற்றுகிற வாய்ப்பை நழுவ விட்டுட்டீங்களே!

போகட்டும், இந்திராவின் கரத்தைப் பலப்படுத்தறதா முடிவு செய்துட்டீங்க, அதையாவது ஒழுங்கா, மறுபடியும் நிறம் மாறும் செய்யப் போறீங்கன்னும் நினைக்க முடியலையே! அங்கே உங்க அபிமான புத்திரன் ஷரத் பவாரையும் பின்னோட அழைச்சுக்கிட்டுப் போய் ராஜீவுக்குப் போட்டியா அவர் செல்வாக்கை கட்சிக்குள் வளர்க்க ஆசைப்படறீங்களாமே கேள்விப்படறேன். பவார் உங்க ஆசையிலே மண்ணைப் போடுவாரோ, வாயிலே சர்க்கரையைப் போடுவாரோ? இப்பச் சொல்ல முடியாது. ஆனா ஒண்ணு நிச்சயம். இந்த மாதிரி சகுனித்தனங்கள் நீடிக்கிறவரையில் இந்தத் தேசமும் உருப்படப் போறதில்லை, எங்க வாழ்க்கையும் மலரப் போவதில்லே.

ஏதோ டிக்கெட் செலவு இல்லாம நாடகம் பார்க்கிற ஒரு லாபமாவது இருக்கேன்னு சந்தோஷப் பட்டுக்கறோம்!




1981 ஜூன் 7

துன்மதி வைகாசி 25

மலர் : 39 இதழ் : 45



கல்கி





தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்

The Country is wholly dismantled by draughts. The weavers, washers and dyers etc abandon their habitations and perish in the fields for want of food. - Rastell

**10**

திருமலாம்பா வீட்டில் கத்தியை மிரட்டலாகக் காண்பித்து எதிரே வந்தவன் நாராயண ராஜு.



திருமலாம்பாவின் கணவன். துணி வியாபாரம் செய்தவன். அர்ச்சுனன் அதை அறிவான்.

தனது கால்கள் இரண்டும் உபயோகம் இழந்திருக்க,

ஒரு நெருக்கடியான இக்கட்டு அவனை நெருங்கி வருவதாக உணர்ந்தான்.

''எடு பணத்தை'' என்று சீறினான் ராஜு.

அந்தக் குரல் அவன் மாதிரியே ஒலிக்கவில்லை. ஏதோ பைசாசம் அவனுள் புகுந்து ஆட்டுவது போலிருந்தது.

அர்ச்சுனன் வலது இடுப்பில் கை வைத்தான். ஒரு நீள உலோக வாள் சீறி வெளி வந்தது.

ராஜு கத்தியை அச்சுறுத்தலாக ஓச்சி வர, அர்ச்சுனன் தருணம் பார்த்துத் தனது நீண்ட வாளை ஒரே ஒரு முறை வீச்சென்று காற்றில்சிதறவிட,

ராஜுவின் கத்தி கரணம் அடித்து முற்றத்தில் போய் உதிர்ந்தது.

ராஜு அதை எடுக்க ஓடினான்.

''நில்லு! நகர்ந்தால் வாளை எறிந்து உன்னைக் கொல்லுவேன். என் குறி தப்பாது!'' என்று அர்ச்சுனன் எச்சரித்தான்.

ராஜு காலைப் பின்னிக் கொண்டு நின்றான்.

முற்றத்தின் நலிந்த வெளிச்சம் அவன் மீது விழ,

ராஜுவுக்குக் கிட்டத்தட்ட ஒரு வேதாள உருவம் வந்திருந்தது. மார்புக் கூடு தெரிய, முகவாய் எலும்பு பிரதானமாய் முன் நோக்கி முந்தியிருக்க, கண்கள் இரண்டும் பாதாள ஆழங்களில் இருந்தன.

நாராயண ராஜுவா இவன்?

''ராஜு! வெட்கமில்லை? வழிப்பறியா செய்யறே?'' என்று அர்ச்சுனன் குமுற,

ஏறிட்டுப் பார்த்த ராஜு, ''எங்களுக்கு வேறு வழி என்ன வச்சிங்க?'' என்று சீறினான்.

''ஏன்; உன் துணி வியாபாரம் என்ன ஆயிற்று?''

''என் வியாபாரமா?'' என்று ஏளனமாகக் கேட்டான் ராஜு. ''எங்கே அதை நடக்க விட்டுங்க?''

''நாங்கள் என்ன தடுக்கவா செய்தோம்?''

''நெசவாளிகிட்ட கொள்ளை விலைக்கு வெள்ளைக்காரங்க துணி வாங்கிக்கிட்டுப்

போனுங்க அதைத் தடுத்தீங்களா? நெசவுக் குடும்பத்தை யெல்லாம் அவங்க கோட்டைக்குக் கொண்டு போனுங்க. அதைத் தடுத்தீங்களா? வரி வரின்னு இருக்கிறதையெல்லாம் ராஜாங்கக்காரங்க புடுங்கிட்டுப் போனுங்க. அதைத் தடுத்தீங்களா? நீங்க ஒருத்தனுக்கு ஒருத்தன் சண்டை போட்டுக்கிறதிலே சண்டைப் பணம் கொடுன்னு தலைக்குத் தலை பணம் பறிச்சாங்க. அதைத் தடுத்தீங்களா?''

''பலே ராஜு!'' என்றான் அர்ச்சுனன். ''இவ்வளவு காரியங்களும் நடக்கவில்லை என்பதற்காகத்தான் வழிப்பறிசெய்யறியா?''

''வேறு வழி என்ன இருக்கு?''

''ஏன் இல்லே?''

''என்ன இருக்கு சொல்லுங்க! இன்னிக்கு அரிசி விக்கிற விலை தெரியுமா?''

''சொல்லு!''

''அரிசிபணத்துக்கு எட்டு நாழி வித்தது. [1 ரூபாய்க்குச் சுமார் 34 நாழி அரிசி.] இப்போ ஒரு பணத்துக்கு அஞ்சு நாழி கிடைக்கிறதில்லே! [இப்போ 1 பணத்துக்கு 5 நாழி கூடக் கிடைக்கவில்லை!]''

அரிசி விலை எட்டு நாழி விற்றது வரை தெரியும். இப்போது இன்னும் குறைந்து விட்டது. பஞ்சம் முதல் காரணம். மூன்று வருஷங்களாக மழை இல்லை. இதைத் தவிர ஒருத்தருக்கொருத்தர் பட்டத்திற்காகப் போடும் பூசல் வேறு. எல்லாம் போட்டு விவசாயியைப் பிடுங்க, வேளாண்மை செத்து விட்டது. விவசாயிகள் ஊரை விட்டு ஓடிவிட்டார்கள்.

ராஜு மேலும் நிற்க முடியாமல் இளைப்புடன் கீழே உட்கார்ந்தான்.

அர்ச்சுனன் அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

மேலே கேட்க முடியவில்லை.

கேட்க நா எழவில்லை.

இது வெறும் பஞ்சம் இல்லை, மகா பஞ்சம்.

''சரி; உன் குடும்பம் என்ன ஆயிற்று?''

''என் குடும்பமா?'' முகத்தை வேதனை கோணலாக்க, ''என் குடும்பம் ஒழிஞ்சு போச்சு. என் பொருள் எல்லாம் வரிக்காரங்க எடுத்துட்டுப் போனுங்க. திருமலாம்பா கர்ப்பிணி. சோறு இல்லாமச் செத்தா. என் மூத்த பையனும் போனுன். என் இளைய பையனுவது உயிரோடிருக்கட்டும்னு வித்துட்டேன்.''

''வித்துட்டியா?''

''ஆமாம்; அவன் பசியிலே கத்தற கத்து என்னுல பொறுக்க முடியல்லே. என்னேட இருந்தா செத்துத்தான் போவான். எங்கே யாவது இரண்டுவேளை சோறேடு வாழட்டும்னு அடிமையாய்வித்துட்டேன்.''

அர்ச்சுனனுக்கு அடிவயிற்றில் பற்றியது.

''நீ அப்படிச் செய்யலாமா?''

''ஏன் செய்யக் கூடாது? ஊரே செய்யுது. கூட்டம் கூட்டமா அடிமைங்களை ஓலாந்தியங்க கொண்டு போறுங்களே! நீங்களெல்லாம் பார்த்துக்கிட்டுத்தானே இருக்கீங்க?''

''சரி! இங்கே சுவர்ணமுகி வந்தாளா சொல்லு!''

ஹஹ்ஹா என்று சிரிப்பு என்கிற பேரில் விக்கினன் அவன். வயிறு என்னமாக எக்கியது? சிரித்தபோது நெஞ்சு வலித்தது போலிருந்தது. மார்பை இறுக அமுக்கிக் கொண்டான்.

''சொல்லு! சுவர்ணமுகி வந்தாளா?''

''வந்தா!''

''எங்கே அவள்?''

''வித்தாச்சு!''

''வித்தியா?'' என்று கூச்சலிட்டுக் கேட்டான் அர்ச்சுனன்.

''ஆமாம். மூணு வராகனுக்கு விற்றேன்.''

''பாவி!''

''பாவியா? நீயா எனக்குச் சோறு போடப் போறே! வித்தேன். இப்ப அரை வயித்துச் சோறு சாப்பிடறேன்.''



''யாருக்கு வித்தே?''

''ஒலாந்தியனுக்கு.''

''அவன் எங்கே போறான்?''

''எனக்கு என்ன தெரியும்?''

அர்ச்சுனனுக்குக் கோபமும் வந்தது இரக்கமும் வந்தது. ராஜா அந்த அரை எலும்புக் கூண்டாக உட்கார்ந்திருப்பது கோரமாக இருந்தது. அவன் பேசிய பேச்சோ அதை விடக் கோரம்.

தனது பைக்குள் தோண்டி நான்கு தங்கப் பணங்களை எடுத்தான். அவன் முன் கடாசி விட்டு வெளிப்புறத்தைப் பார்த்து நகர்ந்தான்.

போகிகள் அவனைத் தூக்கிப் பல்லக்கில் வைத்தார்கள்.

''முதலில் ஊரை விட்டு வெளிப்புறம் போங்கள். ஊரே நாறுகிறது'' என்றான் அவன்.

**கா**லையில் புறப்பட ஒரு பட்டாளமே ஆயத்தமாக இருந்தது.

ட்ரேக் ராஜர் எல்லாவற்றையும் பார்வையிட்டான்.

அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

இத்தனை பேரும் அவன் பணம் கொடுத்து வேலை செய்கிறார்களா?

ஐந்து பொதி மாடுகள், இரண்டு குதிரைகள், இரண்டு பல்லக்குகள்!

ஐந்து மாடுகளை நடத்த ஐந்து பேர்,

மாடுகளைக் கவனிக்க இரண்டு வேலையாட்கள்,

குதிரை பராமரிப்பாளர் இரண்டு பேர்,

இரண்டு பல்லக்குகளைத் தூக்க எட்டுப் பேர், அவர்களுக்கு ஓய்வு கொடுக்க நாலு பேர்.

இந்தியக் காவலாளிகள் நாலு பேர்.

வேலையாட்கள் நாலு பேர்,

கவர்ணமுகிக்குப் பணிப்பெண்கள் இரண்டு பேர்,

ஆக மொத்தம் 31 வேலையாட்கள்!

இந்திய மண்ணில்தான் இவ்வளவு பேர்களும் இவ்வளவு குறைந்த ஊதியத்தில் வேலைக்குக் கிடைப்பார்கள்.

ராஜர் ஒரு விஷயத்தைக் கவனித்திருக்கிறான்.

ஒரு சின்ன இந்தியக் குடும்பம் உண்பதற்கும் உடுப்பதற்கும் மாதம் எட்டுப் பணம் (சுமார் 2ரூபாய்) போதுமானதாக இருந்தது.

ஒரு இந்தியனின் உணவு வகைகளும், அவனது உடை வழக்கங்களும் மிக எளிமையாகவே இருந்தன.

ஒரு பணத்தில் (சுமார் கால் ரூபாய்) ஒரு இந்தியனுக்கு 16லிருந்து 20 வேளை உணவு கிடைத்து விடுகிறது.

இதனால் இவ்வளவு பெரிய படையை அவன் அமர்த்திக் கொண்டு பிரயாணம் செய்ய முடிகிறது.

'நான் ஒரு இந்திய ராஜா போல் போவதை என் பெற்றோர்கள் பார்க்க வேண்டும். அல்லது எஸ்மரல்டாவாவது பார்க்க வேண்டும்' என்று எண்ணினான் ராஜர்.

கவர்ணமுகி பல்லக்கில் ஏறிக்கொண்டதும் பிரயாணம் தொடங்கியது.

ஸாந்தோமே வழியாக அந்தக் கோஷ்டி போகும்போது அந்தக் கூரை வேய்ந்த சர்ச்சையும், அதன் மணிக்கூண்டையும் கவர்ணமுகிக்குக் காண்பித்தான் ராஜர்.

ஏசுபிரானின் நேரடிச் சீடர் புனித தாமஸின் கல்லறை அங்குதான் இருக்கிறது என்று அவன் கூறியபோது கவர்ணமுகி அதை அதிகம் புரிந்து கொள்ளவில்லை.

கிழக்கே கொள்ளை மல்லிக் கூடைகளை வரிசையாகக் கவிழ்த்துவது போல அலை வரிசை சிரிப்பதை அவள் பெருமூச்சோடு பார்த்தாள்.

ஊரில் பணக்காரர்களின் வீடுகள் ஐரோப்பியக் கட்டடக் கலையின் சின்னமாகத் தோற்றம் தந்தன.

வீடுகளின் சாளரங்களும் முகப்புக்களும் வெகு கம்பீரமாக நின்று ஒரு வியப்பான காட்சியை அவள் பார்வையில் வரைந்தன.

வீதிகள் வெகு சுத்தமாகவும் சப்தமில்லாமலும் இருந்தன.

சில வீடுகளிலிருந்து வரும் ஐரோப்பிய கீதம் விசித்திர ஒலியாக அவள் காதில் விழுந்தது.

---



## கிணறு வெட்டிய அதிகாரிகள்!

ஒரு அதிகாரி வேறு இடத்துக்கு மாற்றலாகிப் போக நேர்ந்தது. ரிலீவ் ஆகிற போதுதான் அவருக்கு அந்த விஷயம் நினைவுக்கு வந்தது.

மாற்று அதிகாரி பொறுப்பேற்க வந்த நிலையில் நுழைந்தார்.

''மிஸ்டர்....! இங்க பண்ணையில ஒரு கிணறு இருக்கணும். அப்படி ஒண்ணு வெட்டறதா ஐயாயிரம் ரூபாய் வாங்கிட்டோம். இப்பக் கிணறு இல்லேன்னு வம்பு வரும். பார்த்துக்குங்க...''

''அதனால என்னங்க... நான் கவனிக்கிறேன். கிணறு இருக்கிறதாவே நான் சார்ஜ் எடுத்துக்கறேன்... அட்ஜஸ்ட் பண்ணிடலாம்...''

பிரச்னை பூதமாய் வெடிக்காமல்போன சந்தோஷத்தில் அந்த அதிகாரி புறப்பட்டுப் போனார்.

அடுத்த மாதம் அந்த இரண்டு அதிகாரிகளும் சந்தித்துக் கொண்டார்கள். முந்தையவர் கேட்டார்.

''என்ன மிஸ்டர்... கிணறு விவகாரம் என்ன பண்ணினீங்க... யாரும் இன்ஸ்பெக்ஷன் வரலியே...''

''கவலையை விடுங்க. பிராப்ளம் ஓவர். பண்ணையிலே பழைய கிணறு பிரயோசனமில்லே; தூர்த்துடலாம்னு ரிப்போர்ட் அனுப்பிச்சேன். ஓ.கே. ஆயிடுச்சி. அந்தச் செலவுக்கு ஆறாயிரம் ரூபாய் சாங்ஷன் ஆயிடுச்சி...'' என்றார் புதிய அதிகாரி!

—'மிங்க்'

# நீயா?

சந்திரநாத்

எழுதும்

மர்மத்

தொடர்கதை



21.6.81 இதழில் ஆரம்பம்



இந்த வாரம் டி.வி. சினிமா

## குடியிருந்த கோயில்

எம். ஜி. ஆர், ஜெயலலிதா, ராஜஸ்ரீ, நம்பியார் போன்ற பலர் நடித்த இந்தப் படத்தை கே. சங்கர் டைரக்ட் செய்ய, இசையை எம். எஸ். விசுவநாதன் அமைத்துள்ளார். இதோ சில விமர்சன சாம்பிள்கள்:

**தினமணி**

அபூர்வ சகோதரர்களைப் போல் அறுவைச் சிகிச்சை மூலம் பிரித்து எடுக்கப்பட்ட ஆனந்தை மக்கள் திலகமாகவும், சேகரைப் புரட்சி நடிகராகவும் காட்டும் வகையில் சொர்ணம் திரைக் கதை உரையாடல் எழுதியிருக்கிறார்.

சேகர் தீயவன். இத்தனைக்கும் சிகரெட் பிடித்துச் சுருள் சுருளாகப் புகை விட்டாரா? பாட்டிலும் கையுமாகத் தள்ளாடினாரா? வேறொருத்தியின் முந்தானையைப் பிடித்து இழுத்தாரா? அதெல்லாம் ஒன்றும் செய்யவில்லை. ஆயினும் சேகரை ஒரு முரடனாக, தீயவனாக, தம் நடிப்பின் மூலம் காட்டிவிட்டார் எம். ஜி. ஆர் என்றால் அது அதிகப்படியான கணிப்பல்ல.

நேரு பொம்மையில் கூட கருப்பு கெப்பு. ஆனால் ஒன்று. ''தியாகி'' ''வீரன்'' என்பன போன்ற சொற்கள் வரும்பொழுது நேரு பொம்மையைக் காட்டுகிறார்கள். எப்படியோ ஏதோ ஒரு வண்ணத்தில் நேருவை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

**கல்கி**

இரு வேறு இயல்புகள் கொண்ட இரட்டையராக எம். ஜி. ராமச்சந்திரன் தோன்றுகிறார். அது அவருக்குக் கைவந்த பாத்திரம். ஆகிவந்த பாத்திரமும் கூட.

ஒளிவு மறைவில்லாமல் உடையுடுத்தி, கையைக் காலைத் தூக்கிக் காட்டு மிராண்டி நடனம் ஆடிக் களிப்பூட்டுகிறார் ராஜஸ்ரீ. சல்வா உடையில் சரஸமாடும் ஜெயலலிதா மேல் நாட்டுப் படம் பார்க்கிறோமோ என்று நம்மைப் பிரமிக்க வைக்கிறார்.

ஹாஸ்யத்துக்கு ஒரு நாகேஷ் இருக்கிறார். வி. கே. ராமசாமியுடன் சேர்ந்துகொண்டு சிரிப்பு வெடிகளை உதிர்க்கிறார்.

பண்டரிபாய்தான் குடியிருந்த கோயில். —தாய். அவர் நடிப்பில் அனுபவம் பேசுகிறது.

'என்னைத் தெரியுமா?', 'நான் யார்' என்ற பாடல்கள் நினைவில் தங்குகின்றன.

''சிக்கி''

ஊரின் மண் கோட்டை எல்லையைக் கடந்த பிறகு, ராஜர் அவள் அருகே வந்தான்.

''இந்த நகரின் வழியாக உங்களை நான் அழைத்துச் சென்றதற்குக் காரணம் உண்டு. இந்தநகரின் செழிப்பை நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். பூவிருந்தவல்லி தாண்டிய பிறகு உங்கள் நாட்டுப் பஞ்சத்தை நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்'' என்றான்.

பிரயாணக் கோஷ்டி மதிய நேரத்தை அணுகும்போது பூவிருந்த வல்லியைக் கடந்தது.

ஆவலுடன் சுவர்ணமுகி பல்லக்குச் சீலையைத் திறந்து பார்க்க,,

ஊரின் வீதிகள் அநேகமாக சூன்யமாக இருந்தன.

ஜனங்களைப் பார்ப்பதே கஷ்டமாக இருந்தது.

பாதிப் பேர் ஊரை விட்டுப் போய்விட்டதாகவும், பாதிப் பேர் மறைந்து வாழுவதாகவும் ராஜர் தெரிவித்தான்.

''நான் வெள்ளைக்காரன் போகிறேன், பக்கத்தில் வந்தால் சுட்டுவிடுவேன் என்ற பயத்தில்தான் உங்கள் ஜனங்கள் நம்மை நெருங்காமல் இருக்கிறார்கள். இல்லாவிட்டால் இந்தப் பொதி மாடுகளைச் சூறையாடிவிடுவார்கள்'' என்றான் ராஜர்.

ஊரைத்தாண்டி பத்திரமாகப்போய்விட்டு,

அந்தக் கல் மண்டபத்தை நெருங்கும் போது ராஜர், சுவர்ணமுகியிடம், ''வாருங்கள்'' என்றான்.

மண்டப முகப்பில் பாதி எலும்புக் கூடாக யாரோ படுத்திருந்தார்கள்.

அந்த எலும்புக் கூட்டின் கை மெல்லியதாக அவர்களை நோக்கி ஆடுவதைப் பார்த்த ராஜர் தனது கோஷ்டியை நிற்கச் சொன்னான்.

சுவர்ணமுகி இறங்கி ராஜருடன் மண்டபப் படிகளில் ஏறிப் பார்க்க,

அங்கே சற்றே உள்ளே தள்ளி ஓர் இளம் பெண்மணி ஒரே ஒரு கந்தல் புடவையுடன் படுத்திருந்தாள்.

அவள் முகம் கோரமாகச் சுருங்கியிருந்தது.

சாப்பிட்டுப் பல நாட்கள் ஆகியிருக்கும். தன் அருகில் வரும் காக்கைகளையும் சற்று எட்டத்தில் கூரிய அலகுகளுடன் தருணம் பார்த்து உட்கார்ந்திருக்கும் கழுகுகளையும் அவள் விரட்ட முடியாமல் படுத்திருந்தாள்.

அவளுக்குச் சோறு கொடுக்க முயன்ற போது, அவள் தன் நலிந்த கையை எடுத்து வேறுபுறம் காட்டினாள்.

அங்கே போய்ப் பார்க்க, ஒரு ஓலையினால் மூடிய மறைப்புக்குள் இரண்டு சிறுமிகள் குற்றுயிராக இருந்த நிலையில் பார்த்தார்கள்.

''கழுகுக்குப் பயந்து மூடி வச்சிருக்கா!'' என்று ராஜர் சொல்ல,

சுவர்ணமுகியின் கண்களிலிருந்து புலபுலவெனக் கண்ணீர் உதிர்ந்தது.

''ராஜர், ராஜர்! நான் பிரயாணம் செய்யவில்லை. இவர்களுக்கெல்லாம் உதவி செய்ய விரும்புகிறேன். நீங்கள் போகலாம்'' என்று கூறிச் சிறுமிகளை எடுக்கப் போனாள் அவள்.

(தொடரும்)

# வெய்யிலே வெய்யிலே!



"டாக்டர்! பொதுவாகவே - இந்த வெயில் காலம் வந்தா அந்த சீசனுக்குத் தகுந்த மாதிரி பழங்கள், இளநீர், நுங்கு இவைகளெல்லாம் அதிகமாகக் கிடைக்குது. உதாரணமாக் கிர்ணி பழம், மூலாம் பழம், தர்பூசணிப் பழம், வெள்ளரிக்காய் இவைகளை ஜனங்கள் நிறையச் சாப்பிடறதையும், கரும்புச் சாறு இளநீர், நுங்கு இவைகளையும் சாப்பிடறதையும் பார்க்கிறோம். சாதாரண மக்கள் உடம்பு சூடு தணியும்னு சொல்லி இதையெல்லாம் சாப்பிடறாங்க. இந்த நுங்கு இருக்கே அதனோட தோலைக்கூட வேர்க்குரு இருக்கிற இடத்திலே தடவுறாங்க. இதைப் பற்றிச் சரும நிபுணராகிய நீங்க உங்க விளக்கத்தைச் சொல்ல முடியுமா?"

"நீங்க குறிப்பிட்டது போல் கிர்ணி, தர்பூசணி, நுங்கு இளநீர் இந்தச் சீசன்லே கிடைக்கின்றன. இயற்கையின் பிரசாதம்! சாதாரணமாய்த் தெரிஞ்சோ தெரியாமலோ நிறையப் பேர் இந்தச் சீசன்லே இவைகளைச் சாப்பிடறாங்க. அதனாலே எவ்வளவோ நன்மைகள் இருக்கு. தனித் தனியா இவைகளைப் பத்திசிறு குறிப்புத் தரேன். குளிர் பானங்களைப் பொறுத்தவரை அது Psycologicalன்னு தான் சொல்லுவேன். ரொம்ப தாகம் இருக்கும்போது குளிர் பானங்கள் சாப்பிட்டால் தாகம் தணிஞ்ச மாதிரிதான் இருக்குமே யொழிய அதைவிட காப்பியோ அல்லது சூடான பானம் ஏதாவது சாப்பிட்டால் நிச்சயமாகத் தாகம் அடங்கும்."

தர்பூசணி, மூலாம் பழங்கள்:

"கிர்ணி, மூலாம் பழம், தர்பூசணிப் பழங்கள்லே நிறையத் தண்ணீர், சிறிதளவு (electrolytes) தாது உப்புக்களும் இருக்கின்றன. ருசி, சீசன் இதுகளும் ஒரு காரணம். இவற்றை நிறையச் சாப்பிடறதாலே indirect ஆக உடம்பிலே ஏற்படற நீர் இழப்பைச் சரிக்கட்ட முடியறது."

இளநீர்: இதுலே நிறையத் தண்ணீர், தாது உப்புகள் குறிப்பாசோடியமும் பொட்டாஷியமும் நிறைய இருக்கு. எல்லாவிதமான தோல் வியாதிகளிலும் தண்ணீர், தாது உப்புக்கள் புரதச் சத்துக்கள் ஆகியவை உடம்பிலிருந்து தோல் மூலமாக வெளியேறுகின்றன. இதை இயற்கையான முறையில் ஓரளவுக்கு ஈடு செய்யக் கூடியது இளநீர். உடம்புக்கு நிச்சயமாகவே நல்லது. இளநீரை இரத்தக் குழாய்கள் மூலமாக உடம்பிலே குளுகோஸுக்குப் பதிலாகச் செலுத்த முயற்சி செய்து வெற்றியும் கண்டிருக்கிறார்கள்.

கரும்புச் சாறு: மிகவும் சத்துள்ளது. தண்ணீர் நிறைய உள்ளது. சர்க்கரைச் சத்து, உப்புச் சத்து ஆகியவையும் உடம்புக்குச் சக்தியைக் கொடுக்கும். ஆகையால்நிச்சயமாக வெயில் காலத்தில் ஏற்படும் சோர்வை இது போக்குகிறது.

வியர்வை, வேர்க்குரு: கடைசியாக வேர்க்குரு வருவதற்கு மூலகாரணம் உடம்பிலுள்ள வியர்வைத் துவாரங்கள் அடைத்துக் கொள்வதால்தான். கோடை சீஸனில்உடம்பு உஷ்ண நிலையில் இருப்பதற்கு இயற்கை செய்யக் கூடிய பெரிய உதவி இது.

வியர்வை: ஆனால் வியர்வை அதிகமாக வெளிவரும்போது உடம்பில் உள்ள உப்புச் சத்துக்களும் தண்ணீரும் வெளியேறுவதால் அதிக களைப்பு ஏற்படுகிறது. அந்தக் களைப்பைக் குறைப்பதற்கு இந்தப் பழங்களும் குளிர் பானங்களும் நல்ல சாதனம்.

கோடைப்பரிசாகக் கிடைத்த உஷ்ணக் கட்டிகளுக்குச் சரும மருந்தை வாங்கிக் கொண்டு "நன்றி டாக்டர் வணக்கம்" என்று விடை பெற்று வெளியேறினேன். வரும் வழி நெடுகிலும் அங்கங்கே ஐஸ் நீர், ஐஸ் மோர், ஐஸ்கிரீம் வகைகளும் இளநீர், நுங்கு ஆகியவை விற்கும் இடங்களில் மக்கள் நிரம்பி வழிந்தனர். "எப்போது வெய்யில் போகும், உஷ்ணம் குறையும் என்ற கவலை நமக்கு! ஆனால் வெயில் குறைகிறதே அதோடு வியாபாரம் கரைகிறதே' என்ற கவலை அந்த வியாபாரிகளுக்கு. பழக்க தோஷத்தில் ஐஸ் வாட்டர் வாங்கிக் குடித்துவிட்டு நடையைக் கட்டினேன்.

பேட்டி: சாரா

அட்டையில்: குமாரி வைஜயந்தி மாலா
வண்ணப்படம்: ஹரீஷ்

டாக்டர் ஜானகி ரமணி



ரசிகமணி ரசித்த மணிகள்

# தனித் தன்மை

மீ.ப.சோமு



ராஜாஜியின் தமிழில் உள்ள ஆடம்பரமில்லாத நேர்மை, கல்கி தமிழிலுள்ள உல்லாசம், டாக்டர் சுவாமிநாதய்யர் தமிழிலுள்ள எளிமை, பாரதியார் தமிழிலுள்ள வேகம் இவற்றை மனமாரப் பாராட்டுவது போலவே, பெரியார் ஈ. வே. ராவின் தமிழையும், கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனின் தமிழையும் மிக மிகப் பாராட்டுவார் டி.கே.சி. யூனிவர்ஸிடிக்குள் போகாமல் தப்பியதால் பெரியார் தமிழும் கலைவாணரின் தமிழும் தனித்த ஆற்றலோடு வெளிவருகின்றன என்று டி.கே.சி. அடிக்கடி கூறுவார்—அந்தத் தமிழ் நடையை!

எந்தக் கட்சியைச் சேர்ந்தவர், எந்த ஜாதியைச் சேர்ந்தவர், எந்த ஊர்க்காரர், இவரைப் பாராட்டுவதால் நேர்கிற விளைவுகள் என்ன, என்பதையெல்லாம் பாராமல் தமக்கு மாறுபட்ட கருத்துக்கள் சொல்பவர்களையும் கூட அவர்கள் பேசுகிற அவர்கள் எழுதுகிற தமிழ் நடைக்காக முழு மனசோடு மெச்சுவதில் டி. கே. சி.யைப் போல் இன்னொருவரைக் காண்பது அரிது!

பிறருடைய தமிழை இப்படியெல்லாம் பாராட்டி வந்தாரே டி.கே.சி., அவருடைய தமிழ் நடை எப்படி இருந்தது?

ஆங்கிலக் கல்வியினால் தமது நடையின் தமிழ்ப் பண்பு கெட்டுப் போகாமல் எப்படியோ அதைப் பாதுகாத்துக் கொண்டவர் ரசிகமணி! சாதாரண மக்கள் பேசும் சாமானிய வார்த்தைகளைக் கையாண்டு பெரிய பெரிய தத்துவ நுட்பங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி விடுவார்! சும்மா, ரொம்ப, பலே, ஜோர், பேஷ், அடடா போன்ற சொற்களைக் கூசாமல் உபயோகிப்பார். ஆனாலும் அந்த நடையில் எளிமையோடு ஆழம் இருக்கும். தெளிவோடு கலையழகு திகழும்!

பொதுவாக, ஆங்கிலத்திலோ அல்லது தமிழிலோ அல்லது வேறு எந்த மொழியிலோ, ஒரு தனித் தன்மையோடு எழுதுகிற எழுத்தாளர்கள் மிக மிகச் சிலரே! ஆசிரியரின் பெயரைப் போடவில்லை என்றாலும், அந்த நடையின் போக்கிலிருந்து இது இன்னார் எழுதியதுதான் என்று உறுதியாகச் சொல்லிவிடக் கூடிய ஒரு தனி வடிவம் மிகச் சிலருடைய உரைநடைக்குத்தான் உண்டு—எந்த பாஷையிலுமே! அத்தகைய மிகச் சிலரில் டி.கே.சி. ஒருவர். அவருடைய படர்ந்த மீசை, அடர்ந்த சிங்கத் தலை, அகன்ற நெற்றி, அதில் ஒரு சந்தனப் பொட்டு, தூண்டில் போடுவது போல் கூரிய கண்கள் — இப்படி ஒரு தனித்த அடையாளம் அவர் முகத்துக்கு இருந்தது போல், அவருடைய தமிழ் நடைக்கும் ஒரு தனி உருவம் உண்டு. அவர் எழுதியுள்ள நூல்களிலும், 'கல்கி'யில் அவர் எழுதிவந்த தொடர் கட்டுரைகளிலும் இந்தத் தமிழ் உருவத்தைப் பலரும் கவனித்திருக்கக் கூடும். இந்தத் தனித்த பண்பு அவருடைய கடிதங்களில் இன்னும் வெளிப்படையாகவே தெரியும். சொந்த விஷயங்களைப் பற்றி அவர் எழுதினாலும் உப்புச் சப்பில்லாத வார்த்தையாக இராது! ஒரு இலக்கியத் தரம் அதில் துலங்கும்! ஒருவருக்குச் சொல்கிற உபதேசம் எல்லோருக்குமே பயன் தருவதாக விளங்கும். பெரிய பெரிய கலையுண்மைகளும், இலக்கியக் கோட்பாடுகளும் அங்கங்கே மின்னல் போடும்! சில வாக்கியங்கள் வசன கவிதைகளாகவே மிளிரும்!

உதாரணத்துக்கு ஒரு கடிதத்தை இங்கே தருகிறேன். சொந்த விஷயங்களைக் கூட அவர் எப்படி வெளியிடுகிறார் என்பதை, அந்த இலக்கியப் பாங்கைப் பார்த்து அனுபவிக்கலாம்! கடிதத்திலிருந்து சொந்த விஷயங்களை எடுத்து விட்டால், ரசிகமணியின் தனிப் பண்புக்குள்ள முழு வடிவையும் குறைவின்றிக் காண முடியாது என்பதால் முழுக் கடிதத்தையும் சொந்த விஷயங்கள் இருந்தபோதிலும் அப்படியே கொடுக்கிறேன்!

1944 கல்கி தீபாவளி மலரில் கனு தேசாய் போன்ற ஓவியர்களின் சித்திரங்களுக்கு டி.

கே.சி. எழுதியிருந்த விளக்கங்களை — அவ ருடைய பெயர் அவற்றில் குறிப்பிடவில்லை— படித்துவிட்டு அவருக்கு நான் எழுதிய ஒரு கடிதத்துக்கு வந்த பதில் இது. சென்னை மருத்துவக் கல்லூரியில் மருந்தியல் பேரா சிரியராக இருந்த காப்டன் வெங்கடாசலம் (என் தங்கையின் மாமனார்) அவர்களின் வீட்டுக்குப் போய், அந்த டாக்டரின் வீட்டி லேயே நமது வைத்திய யோசனைகளைக் கூறி வந்ததைச் சொல்லிக் கடிதத்தை ஆரம்பிக்கிறார்:

திருக்குற்றாலம்
19–10–44

அருமைச் சோமுவுக்கு.

சென்னையில் சுமார் பத்து நாள் இருந் தேன். மோட்டார் டயர் பஞ்சம், பெட் ரோல் பஞ்சம், இவைகளால் அக்கம்பக்கம் போகவில்லை. கடைசி நாள்தான் எனக் கான காருக்கு டயர் வந்தது. அவிழ்த்து விட்ட கன்று மாதிரிச் சென்னையை அப்படி யும் இப்படியுமாகச் சுற்றி வந்தேன்!

கடைசியாக காப்டன் வெங்கடாசலம் அவர்கள் வீட்டுக்கும் போக முடிந்தது. அவர்கள் வீட்டில் இல்லை. அம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தேன். அருமைத் தங் கையையும் பார்த்தேன். சௌக்கியமாகவே இருக்கிறாள். இது ஒன்பதாவது மாசம் என் றும் தெரிந்து கொண்டேன். வேலை ஏதா வது சிரமம் இல்லாமல் செய்து கொண் டிருந்தால் உடம்புக்கு நல்லது என்று சொன் னேன். கர்ப்பிணிகளின் மனசு உள்முகமாகப் போவதை (Introspection) தடுப்பதற்குச் சரி யான சாதனம் வீட்டு வேலையில் மனசைச் செலுத்துவதுதான். இந்த உண்மையைத் தெரியாத ஆங்கிலம் கற்ற கர்னுடகங்கள், கர்ப்பிணிகள் வேலையே செய்யக் கூடாது. ரெஸ்டு வேணும், 'எக்ஸ்போஷர்' கூடாது என்றெல்லாம் அபத்தத்தை அளந்து கொண்டிருப்பார்கள். கர்ப்பிணிக்கு ரெஸ்டு வேண்டியதுதான். என்ன ரெஸ்டு? உள்ளத் தின் ரெஸ்டுதான். அது இருந்து விட்டால் தேகத்தின் உறுப்பு ஒவ்வொன்றும் தன்தன் தொழிலைச் சரிவரச் செய்து விடும். நாம் ஒன்றும் செய்ய வேண்டாம். இதுதான் மாணவர்களுக்கு டாக்டர் லக்ஷ்மணசாமி முத லியார் சொல்லுகிற உபதேசம். அந்த உப தேசத்தைத் தங்கைக்கும் அவளுடைய அத் தைக்கும் சொல்லி விட்டேன்!

உன்னுடைய கடிதம் (17–10–44) ஒரே உத்சாகமாக இருந்தது. இந்து கலாசாலையில் உன்னை முதன் முதலாகக் கண்டது ஒரு பிர சங்கத்தின்போது. அப்போது நீ பையன் கூட இல்லை. குழந்தைதான். குழந்தை உரு வத்தில் முதல் பெஞ்சில் உட்கார்ந்திருந்தாய். நான் ஏதேதோ பேசி வந்தேன். அவ்வளவை யும் ஒன்று விடாமல் கும்மாளி போட்டுக் கும்மாளி போட்டுக் கேட்டுக் கொண்டிருந் தாய். இப்படிக் கேட்கிற மாணவனும் உண்டா என்று அதிசயித்தேன். உன்னைக் கண்டு யார் எவர் என்று விசாரிக்க வேண்டும் என்று எனக்கு ஆசையும் இருந்தது. அப் படியே ஓடி விடாமல் நீயும் (நான் புறப் படும்போது) என் வண்டி பக்கம் வந்து நின்

ருய். நின்றதோடு நிற்கவில்லை. கம்ப ராமாயணத்துக்கு (வட்டத் தொட்டிக்கு) நீயும் வரலாமா என்றும் கேட்டாய்! என்னைத் தூக்கி வாரிப் போடாமல் என்ன செய்யும் அது! சரி; அன்று முதல் இன்றுவரை உன்னை நினைத்தாலே எனக்குத் தனியான சந்தோஷம்.

உன்னுடைய கடிதத்தைப் பார்த்ததும் பழைய கும்மாளி முதல் எல்லாம் நினைவுக்கு வந்தன.

தாமரை இலைமேல் நிற்கும் இரண்டு நீர்த் துளிகள் எப்படி ஒன்றோடொன்று கலக்குமோ அப்படி என் உணர்ச்சிகளோடு நீ கலந்து கொள்கிறாய். நீர்த் துளி பூரிப்படைகிறது. அது போல் நம் இதயமும் பூரிப்படைகிறது.

தேவாரத்தில் உள்ள எழுத்துப் பிழைகள், சொற் பிழைகள், சொற்றொடர்ப் பிழைகள் எல்லாம் கண்ணீரைக் கொட்டுவதற்கு மதகுகளாய்ப் போய்விடுகின்றன, சைவ சித்தாந்திகளுக்கு! நமக்குந்தான்! இந்த விஷயமாக நான் பேசியது பற்றியும், (தமிழ்க் கவிஞர்களை மறந்துவிட்டு) அந்தக் காலத்தில் 'ப்ரௌனிங்டே கொண்டாடினுண்டா' என்று நான் சொன்னது பற்றியும், பிரமாதமான விமரிசனங்கள் எழுதி யிருக்கிறாய். உன் விமரிசனங்களை வாசித்த பிறகுதான் அவைகளில் ஜோரும், சௌடால் தனமும் வேண்டிய மட்டும் இருக்கின்றன என்று தோன்றுகிறது. அந்த வாக்கியம் இலக்கியம், கவிதை என்றெல்லாம் வெகு அழகாய் எழுதியிருக்கிறாய். நோக்கால் ருச்சியிலுள்ள அழகிய தத்துவத்தை நீயும் ரொம்ப அனுபவிக்கிறாய். நீ அனுபவியாமல் வேறு யார் அனுபவிக்க!

படங்களுக்கு எழுதியுள்ள குறிப்பை நீ இனம் கண்டு கொண்டது பற்றி எனக்கு ரொம்ப சந்தோஷம். படங்கள் பெரிய பெரிய விஷயங்களை விளக்க வந்துள்ளன. நண்பர் கல்கி அந்தப் பொறுப்பை என்னிடம் சுமத்தி விட்டார். பாடல்களை எப்படியோ பொறுக்கி விட்டேன். பொய்கையார் பாட்டு மட்டும் கல்கியே பொறுக்கியது. அது ரொம்ப வாய்ப்பான பாட்டுத்தான். இதுவெல்லாம் வகுவாய்ப் போய் விட்டது. ஆனால் வசனத்தில் விளக்கம் கொடுக்க வேண்டுமே! கஷ்டமாய்த்தான் இருந்தது. பண்டிதர்களையும் அவர்களது அண்ணுத்தைகளான தமிழ் ஸ்காலர்களையும் எண்ணியபோது முடியாத காரியம் என்று தோன்றியது. யூனிவெர்ஸிடிக்குள் போய் வந்தவர்கள் அல்லவா! படம் விளங்கப் போவதில்லை. சத்தியம், சத்தியம், சத்தியம்! கவிக்கும் எக்ஸாமினேஷனுக்கும் வெகு தொலை! டி.கே.சி. ஏதோ தமிழ்க் கவியைத் தலையிலே தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடுகிறார் என்பார்கள்! அப்படியானால் பயம் ஏற்படாமல் என்ன செய்யும் எனக்கு!

என்னுடைய விளக்கத்தை இனங்கண்டு கொண்டதில் உனக்குண்டான எக்களிப்பை அழகாய் எழுதியிருக்கிறாய். கண்ணும் பொத்தி விளையாட்டில் கதவு இடுக்கில் பதுங்கி யிருந்த ஆசாமியைக் கண்டு கொள்ளும் குழந்தைக்குக் கூட அவ்வளவு எக்களிப்பு ஏற்படாது.

ரொம்ப ரொம்பத் திருப்தி!

நடராஜன், தங்கச்சி, அண்ணி எல்லாரும் சௌக்கியம். இவ்வளவு நீண்ட கடிதம் யாருக்கு என்று நடராஜன் (பேரன்) கேட்கிறான். சோமுவுக்கு என்றேன். அப்படியானால் சரி என்கிறான்!''

---

### ஒரு கேள்வி, ஒரு பதில்!

# வழக்கு வாபஸ்!

கேள்வி: கருணாநிதி மேல் போடப்பட்டிருந்த கோதுமை பேர ஊழல் வழக்கையும், பூச்சி மருந்து ஊழல் வழக்கையும் மத்திய அரசு திரும்பப் பெற்றது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

பக்தவத்சலம் பதில்: சர்க்காரியா கமிஷனின் விசாரணையின்போது சாட்சிகள் சொன்ன விஷயங்களின் அடிப்படையில் தான் இந்த வழக்குகள் போடப்பட்டுள்ளன. இப்போது சாட்சிகளே மாறிவிட்டதாகவும், அதனால் தொடர்ந்து வழக்கை நடத்த முடியாத நிலை இருக்கிறது என்றும் கோர்ட்டில் மத்திய அரசு கூறியிருக்கிறது. என்னைப் பொறுத்தவரை சாட்சிகள் மாறிவிட்ட சூழ்நிலையில் வழக்கை வாபஸ் பெற்றது சரிதான் என்று கூறுகிறேன். ஆனால் அந்த சாட்சி கூறியவர்கள் சத்தியப் பிரமாணம் ஏற்றுத் தானே சாட்சி கூறினார்கள்? இப்போது திடீரென்று மாறுகிறார்கள் என்றால்... இது வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. நாட்டில் ஒழுக்கமும் கட்டுப்பாடும் இல்லை என்பதையே இது காட்டுகிறது.

சாட்சிகள் மாறிவிட்டதால் இந்த வழக்கைத் தொடர்ந்து நடத்தி யிருந்தால் நிச்சயமாக கருணாநிதி நிரபராதி என்று கோர்ட்டால் தீர்ப்புக் கூறப்பட்டிருப்பார். அந்த நிலைக்குச் செல்லாமல் இப்போதே வழக்கைத் திரும்பப் பெற்றது விவேகமான செயல் என்று தோன்றுகிறது.

இந்திரா காந்தியின் மனநிலையை நன்றாக உணர்ந்தவன் நான். கருணாநிதியின் தயவு அவருக்குத் தேவையில்லை. இதனால் நிச்சயமாகக் கூறுகிறேன்; இந்த வழக்குகளை வாபஸ் பெற்றதற்கு அரசியல் உள் நோக்கம் எதுவும் இருக்காது.''

பேட்டி: ப்ரியன்



# வட்டமேஜை



● ''நில்லுங்கள் (எதிர்கால) ராஜாவே'' என்று இன்றைய இளைஞர்களைச் சொன்னாலும் தவறு இல்லை. சென்ற வாரத் தலையங்கம் இளைஞர் சமுதாயத்தைச் சிந்திக்க வைக்கும்.

நெய்வேலி-2 கயல்விழி

● 'நில்லுங்கள் இளைஞரே!' தலையங்கம் பாராட்டத் தக்கதாக இருந்தது. அப்படியே, தன்னிச்சை போல் தேர்வுகள் நடத்தி அலட்டிக்கொள்ளாமல் பொறுமையாக ஆறுமாதம் கழித்து முடிவுகளை வெளியிட்டுக் கொண்டிருக்கும் பல்கலைக் கழகத்தைப் பற்றியும் ஒரு தலையங்கம் எழுதக் கூடாதா?

சென்னை-5 புலியூர் பிரபா

● தங்களை மன்மதனாக நினைத்து, அழகான மனைவியை விலை பேசி வாங்க நினைப்பவர்களுக்கு 'அவசரக்கால அடிமைகள்' நிச்சயமாக ஒரு பாடம் கற்பிக்கும்.

பண்ணுருட்டி வெ. இராமசாமி

● இந்த வாரம் சிறந்த கேள்வி கேட்ட திருமதி லட்சுமி ராமாமிருதத்திற்குப் பரிசு கொடுப்பதை விட அந்தக் கேள்விக்குச் சிறந்த பதில் அளித்துள்ள கடுகுக்கு அவசியம் பரிசு கொடுக்க வேண்டும்.

திருச்சி-1 சங்கம் அருணகிரி

● சிவாஜியின் அமர காவியம் படத்துக்கு நடுநிலையோடு உண்மையான விமர்சனம் எழுதியது கல்கி ஒன்றுதான்.

கும்பகோணம் டி.எஸ். சீதாராமன்

● சிவாஜியின் கம்பீரத்துக்கு முன் அமிதாப்பின் கம்பீரம் எல்லாம் வெற்றுவேட்டு! சிவாஜியின் கம்பீரத்தில் சந்தேகப்படும் அந்த விமர்சகருக்குத் தயவுசெய்து என் அனுதாபத்தைத் தெரிவியுங்கள்!

தங்கதல்லூர் கா. மு. பாருக்

● வாராவாரம் அள்ளிக் கொடுத்து வந்த ரூ. 500 பரிசு இவ்வாரம் இல்லையே. கொடுத்துச் சலித்து விட்டீரா? இல்லை இப்படியே போனால் கஜானா காலியாகி விடும் என்ற அச்சமா?

ஒண்டிப்புதூர் சிந்தாமணி ஹக்கீம்

● இந்தி வசனங்களைத் தமிழில் மொழி பெயர்த்து 'காம்ப்பரமைஸ் பண்ணாத தைரியம்' என நன்று பட விமர்சனத்தைப் பாராட்டி எழுதியிருந்த கல்கி இதழ் எங்கள் கைக்குக் கிடைக்கும் முன்பே அந்த இந்தி வசனங்கள் அனைத்தையும் தமிழாக்கம் செய்து திரையிட்டிருக்கின்றனர் என்ற விஷயத்தைத் தங்களது கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

போடிநாயக்கனூர் எஸ். சையது முகமது

● அன்புக்குரிய குமரி அனந்தனின் குமுறல் நூற்றுக்கு நூறு சரியானதுதான். ஆனால் இத்தனை காலம் கடந்து குமுறக் கூடாது! அந்தக் காலத்தில் அவர் இருந்த இடம் என்ன? பெற்றிருந்த செல்வாக்கு என்ன? மதிப்பென்ன? அன்றைக்குக் கூவி விடிய வைக்காமல் இன்றைக்குக் கோபுரத்தின் மீது நின்றுகொண்டு கூவுவதில் யாருக்கு என்ன லாபம்? — அவருக்கு மட்டுமே லாபம்!

பெங்களூர் ப. மூர்த்தி

● 'வெளிச்சத்துக்கு வாங்க' பட விமரிசனத்தின் கடைசி வரி ''வேறு படத்துக்குப் போங்க!'' இதை ஆமோதிப்பது போல் படத்தில் உள்ள ஒரு ஸ்டில்லை எடுத்துப் போட்டிருக்கும் நீர் பலே ஆளய்யா!

கிணத்துக்கடவு எம். ரமணி

● பார்த்தோம் சொல்கிறோம் பகுதியில், யெம்ஜி, ''இடைக்கட்டி என்றால் என்ன?'' என வினவுகிறார். இடைக்கட்டி என்பது இடையைக்கட்டி எனப்பொருள்கொள்ளவும். The Lord girded my hip and straightened my path எனும் பைபிள்வாசகமே தமிழில் M S W 1261 வேலில் எழுதப்பட்டுள்ளது. Girded my hip என்பதற்கு அர்த்தம், சக்தி அளித்தல் அல்லது செயலுக்குத் தயாராக்குதல். ''இறைவன் எனக்குச் சக்தி அளித்ததுடன் நல்வழி காட்டவும் செய்தார்.''

மேட்டுப்பாளையம் ஏ.ஏ. மனோகரன்

● ''கழுத்தில் விழுந்த மாலையைக் கழற்றித் தூரவை!'' என்ற உபதேசம் கேட்டேன். வேண்டாம்! வேண்டாம்! மாதங்கி போன்ற பண்பு மிக்க பெண்ணை, விவாகரத்துக்குத் தூண்டாதீர்கள். ஹர்ஷன் — மாதங்கி இவர்களைப் பிரிக்க முற்படாதீர்கள். இணைத்து வையுங்கள்.

சென்னை ஸ்ரீதாராகவன்.

**அஞ்சலட்டையில் ஸ்ரீராமஜெயம்**

மேற்படி போட்டிக்கு எதிர்பாராத அளவில் ஏராளமான தபால் கார்டுகள் வந்து குவிந்து விட்டன. பரிசிலனை நடக்கிறது. முடிவு அடுத்த இதழில் இடம் பெறும். அதைத் தொடர்ந்து வரும் இதழ்களில் மற்ற போட்டிகளின் முடிவுகள் வரிசைக் கிரமமாகப் பிரகரமாகும்.

—ஆசிரியர்

# ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்

போர்ன்விடா பருகுங்கள். உங்கள்
வாழ்வில் ஆரோக்கியமும்
ஆனந்தமும் மலரச்செய்யுங்கள்.
அன்றாடம் உங்கள் குடும்பத்
தினருக்கு இன்சுவைமிக்க
போர்ன்விடா வழங்குங்கள்.
போர்ன்விடாவில் கோகோ, மால்ட்,
பால் மற்றும் சர்க்கரையின்
நற்பண்புகள் நிறைந்துள்ளன. நூறு
ஆண்டுகளுக்கும் மேலாக
உணவுப்பான நிபுணர்கள் காட்பரி
தயாரித்து அளிப்பது.




காட்பரிஸ்

**போர்ன்விடா**

அளிப்பது அத்தனையும் நலம்

இப்போது! பெரும் சேமிப்பு
ஒரு முழு ரூபாய்
ரீ:பில் பேக்குடன்

OBM 6450 TM

# கழுத்தில் விழுந்த மாலை... லக்ஷ்மி... 20

காரேஜில் அம்மாவின் கார் நிற்பதை ஹர்ஷன் கவனித்தான். தனது காரையும் உள்ளே நிறுத்திக் கதவைச் சாத்திப் பூட்டி விட்டு, வீட்டை நோக்கி நடந்தவனுக்கு ஒரே வியப்பு.

இருட்டத் துவங்கி விட்டது. ஆனால் வராந்தாவில் கூட விளக்கு இருக்கவில்லை. அவசரமாகத் தன் சாவியைக் கொண்டு கதவைத் திறந்தபோதுதான் கவனித்தான்.

ரோவர் கதவருகே 'லொய் லொய்' என்று புலம்பியபடி படுத்துக் கிடந்தது. வழக்கம் போல் உற்சாகத்துடன் அவனைக் கண்டு குதித்தோடிவரவில்லை. நடை விளக்கைப் போட்டு விட்டுச் சுற்று முற்றும் பார்வையிட்டான்.

வீட்டில் நிலவிநின்ற இறுக்கமான அமைதி அவனைக் கலவரத்தில் ஆழ்த்தியது. என்ன ஆயிற்று? இந்த அம்மா எங்கே?

முன்னறையிலிருந்துலேசான முனகலைக் கேட்டுத் திகைத்துப் போனான். அதற்குள் அவனையும் தள்ளிக் கொண்டு ரோவர் ஒரே பாய்ச்சலில் அந்த அறைக்குள் ஓடியது.

வாயிற் கதவை மூடிவிட்டு வேகமாக வந்து முன்னறை விளக்கைப் போட்டவன் ''அம்மா!'' என்று அலறி விட்டான்.

நாற்காலி ஒன்றின் கையைப் பிடித்து எழ முயன்ற கஸ்தூரியின் முன் நெற்றியில் பட்டிருந்த சிறு காயத்திலிருந்து ரத்தம் கோடாக வழிந்து தாடை மீது ஓடி, அவளது முன்னங்கை மீது சொட்டியிருந்தது.

இத்தனை நாளாகக் கடைப்பிடித்து வந்த விரோதமெல்லாம் காற்றில் பஞ்சாய்ப் பறந்து போயிற்று அவனுக்கு. அவனது அருமை அம்மாவின் நிலையைக் கண்டு மெய் பதற அருகே ஓடி வந்தான். எஜமானியின் கன்னத்தின் மீது மூக்கை வைத்துக்கொண்ட ரோவரைத் தள்ளிவிட்டு, தாயாரை அப்படியே தூக்கினான் மிகுந்த வாஞ்சையுடன்.

''அம்மா! என்னம்மா ஆச்சு!'' என்று பதறினான்.

அம்மாவும் மனத்தாங்கலை மறந்து போனாள். அவளது செல்வ மகன் அன்பும், பரிவும் நிறைந்த குரலில் மனம் கரைந்து போனாள். ''மயக்கமா வந்துது... அவ்வளவுதான் தெரியும். சுர்ர்னு ஒரு வலி. கீழே விழுந்திருக்கிறேன் போல இருக்குது. காப்பி மேஜை முனை நெத்தியிலே குத்தி இருக்கணும். வலியில சட்டுனு முழிப்பு வந்தது நெத்தியைத் தொட்டுப் பார்த்தப்போ... பிசுபிசுன்னு கையில பட்டுச்சு... விளக்கைப் போடணும்னு நினைச்சேன்... முடியல்லே... தலையைச் சுத்திக்கிட்டு மறுபடியும்...மயக்கமா வந்திச்சு...'' அம்மா அழுகையில் திணறினாள்.

''பயப்படாதீங்கம்மா. நான்தான் வந்திட்டேனே. ஒரு சின்னக் காயம். அவ்வளவுதான். இருங்க. எல்லாம் சரியாயிடும்'' —சமாதானமாகச் சொல்லியபடி, தன் கைக் குட்டையை உருவிக் காயத்தின் மீது வைத்து அழுத்தினான்.

ஆட்டுக் குட்டியைத் தூக்குவது போல் அப்படியே தாயாரைத் தூக்கிக் கொண்டு அருகில் இருந்த படுக்கையின் மீது கிடத்தி விட்டு, ஜன்னல் கதவைத் திறந்து விட்டான். மின் விசிறியைச் சுழல விட்டான்.





டாக்டர் சிகாமணியை அவசர மாகத் தொலை பேசியில் அழைத்துவிட்டு, ரோவரைப் பிடித்துக் குளியலறைக்குள் தள்ளி மூடினான். அம்மாவின் அருகில் வந்து ஆதரவாக உட்கார்ந்தவன் மனத்தில் வேதனை சுமையாகக் கனத்தது.

கஸ்தூரி தொடர்ந்து முனகிக் கொண்டிருந்தாள். "தலையை வலிக்குதே!" இடையே அரற்றினாள். குடும்ப வைத்தியர் வருவதற்குள் யுகமே முடிந்து விடும்போல அவனுக்கு மலைப்புத் தட்டியது.

முடிவில் வைத்தியர் வந்தார். நெற்றிக் காயத்தை முதலில் கவனித்து விட்டுப் பின்னர் பரிசோதனை செய்தார். அவரையே கவலையுடன் பார்த்தான் ஹர்ஷன். ஜாடை செய்து அவனை வெளியே அழைத்தார் வைத்தியர்.

ஏதேனும் விபரீதமாகச் சொல்லிவிடப் போகிறார் என்ற பயத்தில் ஹர்ஷனுக்கு மார்பு படபடத்தது. மூச்சு முட்டியது. திகிலுடன் அவரையே பார்த்தான்.

"அம்மாவுக்கு ரத்த அழுத்தம் அதிகமாகவே இருக்கு. அதனால உடனடியா ஆஸ்பத்திரியில் அனுமதிச்சு ஒரு வாரம் வைத்தியப் பாதுகாப்பிலே வைக்கலாம்னு நினைக்கிறேன்."

"ரொம்ப ஆபத்தா இருக்குன்னு சொல்றீங்களா டாக்டர்?" — 'ஓ'வென்று அழ வேண்டும் போன்ற துயரம் நெஞ்சைக் கவ்வியது. ஆண் பிள்ளையாயிற்றே! வெட்கத்துடன் உதட்டை அழுத்திக் கடித்தவாறு துயரை விழுங்கிக் கொண்டான்.

"இரண்டு நாளைக்கு முன் அம்மா தொலைபேசியில எங்கிட்டப் பேசினாங்க.... அலுவலகத்திலே ரொம்ப வேலை. பல கவலைகள். அதனாலே அவங்களுக்கு இரவிலே தூக்கமே இல்லை... அடிக்கடி தலை நோவு வந்துடறதுன்னாங்க. நீங்க கிளினிக்குக்கு வந்து இரத்த அழுத்தத்தைப் பரிசோதிச்சுக்கறது நல்லதுன்னேன். அதுக்குள்ளே இப்படி ஆயிடுச்ச... அவங்க மேலே குத்தம் சொல்லலை. இப்போ அவங்க அலுவலகத்திலே அவங்க வேலை பார்க்கற பகுதிக்குத் தலைவியாக உயர்த்தப்பட்டிருக்காங்க இல்லையா? அதனால அதிகப்படி வேலை வேறே..." அவர் பேசிக் கொண்டே போனார்.

தூக்கி வாரிப் போட்டது ஹர்ஷனுக்கு. அவருக்குத் தெரிந்திருந்த விஷயம் அவனுக்குத் தெரிவிக்கப்படவில்லையே? அவமானமாகவும் இருந்தது.

"அத்தோட வீட்டு விவகாரமும்...." சொல்லிவிட்டுக் குடும்ப வைத்தியர் அலங்கோலமாகக் கிடந்த அறையைச் சுற்றிலும் நோட்டம் விட்டார்.

"முன்போலிருந்தால் அம்மாவை வீட்டிலேயே வைச்சுக் கவனிச்சுக்கலாம், பொறுப்



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1981

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் வழக்கம் போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**முதல் பரிசு ரூ. 1000**
**இரண்டாம் பரிசு ரூ. 500**
**மூன்றும் பரிசு ரூ. 500**
**(இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்)**

ஆகமொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளருக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- முடிவு தேதி ஜூன் 15.
- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர் கல்கி, சென்னை-600 032**

பாப் பார்த்துக் கொள்ள இப்ப வீட்டிலே யாரும் இல்லாததனாலே.... உடனடியா ஆஸ்பத்திரியிலே அனுமதிக்கிறது நல்லதுன்னு சொன்னேன்'' —அழுத்தமாகக் கூறினார் அவர்.

ஹர்ஷன் முகம் சிவந்தது. உடல் அனலாக எரிந்தது. மெல்ல அவரைத் தலை நிமிர்ந்து பார்த்தான் கூச்சத்துடன்.

மாதங்கி அங்கே இல்லாதது கூட அவருக்குத் தெரிந்திருக்கிறது! அவருக்கு மட்டுமென்ன... இத்தனை நாளில் ஊருக்கே தெரிந்திருக்கும்.

''எங்க வீட்டிலே ஏற்பட்ட குழப்பத்தினாலே அம்மாவுக்கு உடம்புக்கு இப்படியாயிட்டதாச் சொல்றீங்களா'' — தடுமாறினான் ஹர்ஷன். குற்ற உணர்வு மனத்தில் முள்ளாக நெருடியது.

''உங்க பாட்டன் காலத்திலிருந்து உங்க குடும்பத்தை எனக்குத் தெரியும். வெறும் கடும் உழைப்பால் உங்கம்மா உடம்பு கெட்டுப்போகலே. இன்னிக்கு அவங்க மனத்துக்கு பெருத்த அதிர்ச்சி தரக் கூடிய சங்கதி ஏதோ நடந்திருக்கு. கடும் உழைப்பும், மன அதிர்ச்சியும் சேர்ந்துக்கவே, ரத்த அழுத்தம் 'ஓஹோ'ன்னு போயிட்டுது. நல்ல வேளை மயக்கமா விழுந்ததிலே கையைக் காலை உடைச்சிக்கலே. சரி! 'அபர்ணா நர்ஸிங் ஹோமு'க்கு அம்மாவைக் காரில படுக்க வச்சு அழைச்சுக்கிட்டு வா. நான் முதல்லே போய் ஒரு ஏ.ஸி. ரூம் ஒண்ணு ஏற்பாடு செய்யறேன்'' — விடை பெற்றுக் கொண்டார் அவர்.

அம்மாவை நர்ஸிங் ஹோமில் தனியாக விட்டு விட்டு வீடு திரும்ப ஹர்ஷனுக்கு மனமே வரவில்லை.

''இரவில் மறுபடியும் மயக்கம் வந்துவிபரீதம் ஏதாவது நேர்ந்துவிட்டால்..? உயிருக்கு ஆபத்தாகி விட்டால்....'' உள்ளூற நடுங்கினான். அதே சமயம், அவன் மனத்திற்குள்ளே ஓர் அதிசயம். ''அம்மா மீது இத்தனை பிரியமா அவனுக்கு! இதை ஏன் அவன் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை?

காரை காராஜில் நிறுத்திவிட்டு...மறுபடியும் வாயிற் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவன் மனத்தில் வீட்டின் 'ஆ'வென்ற தனிமை, அவனையும் அறியாது கண்ணீரை வரவழைத்தது. இதுவரை ஆண்பிள்ளை என்ற வீம்புக்காக அடக்கிக்கொண்டிருந்த அழுகை விம்மலாக அவனது உடலைக் குலுக்கியது.

தனிமையின் கொடுமையைத் தவிர்க்க ரோவர் காலடியில் துணையாகச் சுருண்டு கிடக்க, முன்னறையில் சோபாவில் சாய்ந்து கொண்டான்.

அம்மாவின் ரத்த அழுத்தம் அதிகமாகி ஒருவேளை உயிருக்கே உலை வைத்துவிட்டால்! நெருங்கிய அந்த ஓர் உறவும் அற்றுப் போன பின்னர்... அந்த இழப்பின் துயரை அவன் எப்படித் தாங்கிக் கொள்வான்?

பத்து வயதுச் சிறுவனாக இருக்கையில் மாரடைப்பால் மறைந்து போன அப்பாவின் பேரிழப்பு தந்த அதிர்ச்சியை அம்மாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுது... அவ

ளுடன் துயரைப் பகிர்ந்து கொண்டு...தாங்கிக்கொண்டான்.

அப்பா வைத்துவிட்டுப் போனது அந்த வீடும் கொஞ்சம் பணமும்தான். அதை மட்டுமே நம்பி வாழத் தொடங்கியிருந்தால் இப்போது நிலைமை வேருகிப் போயிருக்கும். அப்பாவின் மறைவுக்குப் பின்னர் அம்மா வேலைக்குப் போக ஆரம்பித்தாள். ஆரம்பத்தில் கார் போன்ற வசதிகள் கிடையாது. அலுவலகத்திற்கு பஸ்ஸில்தான் போய் வந்தாள். வீட்டு வேலைகள் அனைத்தும் அவளே செய்து வந்தாள். பரீட்சை நாட்களில் அவன் கூடவே கண் விழித்துக் கொண்டு காப்பியும் டீயும் போட்டுக் கொடுத்து உற்சாகப்படுத்தினுள். ஏன்? அந்தக் கார் விபத்தின்போது, அம்மா ஆஸ்பத்திரிக்கு நடந்த நடை... அவள் பட்ட வேதனை? எத்தனை இரவுகள் கண் அயராது அவன் அருகே அமர்ந்தபடி... அப்பப்பா... அவள் செய்த பணிவிடைகள்!

இவ்வளவையும் மறந்து போனுனே அவன். நன்றியற்ற ஒரு மிருகம் போல் நடந்து கொண்டானே? இத்தனை நாளாக, அவளது மனம் நொந்துபோகும்படி அல்லவா நடந்து வந்திருக்கிறன்!

சுயநலக்காரி ஷர்மிளா அவனை உதறி விட்டு வேறு ஒருத்தனை மணந்த பின்னரும் அவனை வீழ்த்த எப்படி யெல்லாம் ஒரு வலை விரித்தாள்?.

அவள் இழுத்த இழுப்புக்கெல்லாம் அடங்கி, அவள் பின்னுல் நாய்க் குட்டிபோல ஓடிக்கொண்டிருந்தவன்... பெருத்த தவறு செய்ய இருந்தவனை... நல்ல வேளை! குடும்ப நண்பர் நாராயணசாமியின் சாட்டையடி அவனை மீட்டு விட்டது!

சிந்தனை செய்தபடியே கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தவன் வயிற்றைப் பசி கருட்டி எடுத்தது. எழுந்து சென்று பிரிட்ஜைத் திறந்து குளிர் நீர் பாட்டிலைத் திறந்து மடமடவென்று நீரைப் பருகினுன்.

அவனுகச் செய்து கொண்ட அவலம் இது. கை நிறையச் சம்பாதித்தும், வயிறு நிறையச் சாப்பிட முடியாத திண்டாட்டம். மாதங்கியின் நினைப்பு திடீரென்று நெஞ்சைக் கவ்வியது. தான் செய்த தவறை எண்ணி மருகினபடியே மீண்டும் முன்னறைப் பக்கம் வந்தான்.

வாயிற் கதவைத் தாளிட்டுவிட்டு, சோபாவின் மீது அமர்ந்தவனுக்கு மீண்டும் மாதங்கியைச் சுற்றியே எண்ணம் வட்டமிட்டது.

மனைவி என்று அவள் வீட்டுக்குள் வந்த பின்னரும் தான் ஆண்பிள்ளை என்ற ஆணவத்தினுல்தானே வீட்டினுள் நுழைந்த ஷர்மிளாவை அவள் கண் எதிரிலேயே கொண்டாடினுன்!

ஆனுல் எவனே ஒரு பொருமைக்காரன் எழுதிப் போட்ட மொட்டைக் கடிதத்தைப் படித்துவிட்டு எப்படிக் கொதித்துப்போனுன். உடனடியாக அவளை வீட்டை விட்டே துரத்த ஏற்பாடு செய்தான்? இது என்ன நியாயம்? எத்தனை பெரிய தவறு? அதிர்ஷ்டம் மாதங்கி வடிவில், மனைவி என்ற உரிமையில் அவனை வலுவிலே தேடிக்கொண்டு வந்தது.

# சினிமா, சினிமா!



''தம்பி! ரத்னு தியேட்டரில் என்ன படம் நடக்கிறது?''

''விடியும்வரை காத்திரு.''

''ஏன்? விடிஞ்ச பின்னுடிதான் சொல்லுவியா?''

-வதிலை, ஜெய்குமார்

ஒருத்தி: ''ஏண்டி! திருமணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகிறதாமே?''

தோழி: ''எனக்கென்னவோ என் திருமணம் வயிற்றில் ''சுமை'' வந்ததால்தான் நிச்சயமாச்சு!''

-களந்தை நடேஷ்கண்ணு



ஒருவர்: எங்கே கண்ணும்பு டப்பியைக் கையில் எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டீர்கள்?

மற்றவர்: 'பாக்கு வெத்திலே' படம் பார்க்க.

-மோ, க. இரத்தினசாமி



மனைவி: என்னங்க நீங்க! இரவுக் காட்சி சினிமாவுக்குப் போறதாசொல்லிட்டு விடிந்த பிறகு வர்றீங்க?...

கணவன்: என்னு செய்ய, விடியும்வரை காத்திரு சினிமாவுக்கல்லே போயிருந்தேன்!

-தி. கருப்பசாமி

முட்டாள்! அதை எப்படி உதைத்துவிட்டு... தனக்கே அழிவைத் தேடிக் கொண்டுவிட்டானே!

. மனைவியில்லாத தனிக் கட்டை என்பதை உணர்ந்து கொண்டு விட்டதால் தானே, ரிஸப்ஷன் சரோஜா அவனைப் பார்த்த போதெல்லாம் கண்களால் சிரித்துக் காதல் வலை வீசுகிறாள்? ஸ்டெனோ தங்கம், அனுவசியமாக மிக அருகில் வந்து இடிக்காத குறையாக நின்று தொலைக்கிறாள்?

எல்லோரும் தூண்டில் போடும் அளவுக்கு அவன் ஒரு காட்சிப் பொருளாகி விட்டானே, கர்மம்!

மாதங்கியிடம் அவன் கண்ட குறை என்ன? வீண் மனப் பிரமையால், அவளது அடக்கத்தையும், பண்பையும் சந்தேகித்தான். எரிச்சல்பட்டான். வாழ்க்கை தந்த நல்ல வாய்ப்பை நழுவ விட்டான்.

அவள்மட்டும் இப்போது கூட இருந்திருந்தால் வீடு இப்படியா அலங்கோலமாக இருக்கும்? அவர்களது வாழ்வுதான் இவ்வாறு சீர்குலைந்திருக்குமா?

'அட முட்டாள் ஹர்ஷா! ஒரு நல்ல பெண்ணை, சொல்லாலும், செயலாலும் அடித்து விரட்டி விட்டாயே! சே! நீயும் ஒரு ஆண்பிள்ளைதானா?' தன்னைத் தானே கடிந்து கொண்டு துயரத்திலே துவண்டவனாகக் கண்களை மூடிக் கொண்டிருந்தவன் உறங்கிப் போனான்.

புடவை சரசரக்க, மாடிப் படிகள் மெல்ல ஏறி வந்து மாதங்கி கதவை லேசாகத் தட்டும் ஒலி... தொடர்ந்து கம்மென்ற பன்னீர்ப் பூவின் மணம்.

திடுக்கிட்டு விழித்தான் ஹர்ஷன். ஜன்னல் ஓரத்தில் வளர்ந்து நின்ற பன்னீர் மரத்திலிருந்து காற்று வாக்கில் பூவின் வாசனை அறைக்குள்ளே வீசிக் கொண்டிருந்தது. வேலைக்காரி முனியம்மா கதவைத் தட்டினாள் —நன்றாக விடிந்து விட்டிருந்தது.

உள்ளே வந்தவள் சங்கதியைக் கேட்டதும் முகவாயில் கையை வைத்துக் கொண்டு அப்படியே நின்று விட்டாள்.

''அம்மாவுக்குப் பெரிய வேலை கிடைச்சதுன்னுட்டு ஆபீஸிலே கண்ணுப் போட்டுட்டாங்க...அதாலதான் பாவம் உடம்புக்கு முடியாம வந்திருச்சு. அப்பவே நான் சுத்திப் போடணும்னு நினைச்சேன்.''

''ஆபீஸில் உள்ளவர்கள் போட்ட கண் இல்லை. அம்மாவுக்கு நான் கொடுத்த மனப் புண்!'' சொல்ல முடியாது தவித்தான் ஹர்ஷன். சோம்பல் முறித்தபடி எழுந்து திரும்பியவனின் கண்களில் தரை மீது கிடந்த அந்தக் கடிதம்.... பட்டது.

''என்னவாக இருக்கும்?'' வியப்புடன் எடுத்துப் பிரித்துப் படித்தவன் அதிர்ந்தே போனான்.

அம்மாவுக்கு ஏற்பட்ட துயரத்தின் உச்ச நிலையை இப்போது அவனால் நன்கு புரிந்து கொள்ள முடிந்தது. (தொடரும்)

---

"அவரே வேண்டாம்னு வந்ததுக்கப் பறம் அவர் பேரை நம்ம கடைக்கு வைக்க ணுமா... எனக்குப் பிடிக்கலேன்னு..."

—" 'சாமண்ணா காப்பி கிளப்'னு ஹிஸ்டரி புக்ஸ் படிக்கிறப்பல இருக்குப்பா. மாடர்னு பேர் வெச்சாத்தான் காலேஜ் ஸ்டூடன்ட்ஸ் கோஷ்டி சேர்த்துண்டு வருவா."

" 'குருவே தெய்வம்னு' கொண்டா டுங்கோ மாப்பிள்ளே! குழந்தைக்கு அவன் பேரை வைச்சேள். புதுப் பங்களாவுக்கு அவன் பேரை வைச்சேள். புதுசா ஆரம் பிக்கப்போற ஹோட்டலுக்கும் அவன் பேரையே வைக்கணும்னு — இதுக்குப் பதிலா நீங்க அவன் கடையிலேயே காப்பி ஆத் திண்டிருக்கலாம்...."

"ஜாதக ரீதியா ஒங்க ஸ்டாருக்கு 'ரூபி'ன்னு பேர் வர்ற மாதிரி ராசி பார்த்து வச்சாத்தான் தனியா வந்து தொழில் தொடங்கறதுக்கு அர்த்தம். இல்லேன்னு எல்லாம் வியர்த்தம்."

ஆளுக்கு ஆள் பேசிக்கொண்டிருக்கிறார்கள், மனைவி, மகள், மாமனார், ஜோசியர் மற்றும் நண்பர்கள் எல்லாருமே 'சாமண்ணா காப்பி கிளப்' என்ற கர்நாடகப் பெயரை எதிர்க்கும் போது நடராஜன் மட்டும் அந்தப் பெயரில் ரொம்பவும் பிடிவாதமாக இருக்கிறார். திருவல்லிக்கேணி பாரதியார் சாலையில் நெரி சல் மிகுந்த மையப் பகுதியில் 'சாமண்ணா காப்பி கிளப்' வர்ண போர்டை நான்கு ஆட்களை வைத்து உயர்த்தி வெகு ஜாக்கிர தையாக நிறுத்தி ஆணியடித்துக் கொண் டிருக்கிறார் — மானசீகமாக...

**தா**ம்பரம்.

'சாமண்ணா காப்பி கிளப் (ஒரிஜினல்) வெறிச்சோடிக் கிடக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாகக் குறையத் தொடங்கிய கூட் டம் இப்போதெல்லாம் ஒரேயடியாக நின்று போகிற நிலைமை. காப்பி செக்ஷன் நட ராஜன் கைக்கு என்று காப்பி அப்படி மணக்கும்... அப்படி ருசிக்கும். தஞ்சாவூர் பாணியிலேயே 'டிகிரி காப்பி' என்று போர் டும் போட்டுக் காசை வாரி நிறைத்துக் கொண்டிருந்த சாமண்ணா — கடை முத லாளியும் சரக்கு மாஸ்டரும் அவரே — ஒரு சின்ன மனத்தாங்கலுக்குப் பிறகு நட ராஜன்சென்னையில் தனியாகக்கடை போடப் போகிறான் என்று காற்று வாக்கில் கேள்விப் பட்டபோது நம்பவில்லை. ரொம்பவும் விசு வாசமானவன் நமக்குத் துரோகம் செய்ய மாட்டான் என்று அடித் துப் பேசியவர், ஹோட்டல் திறப்பு விழாப்பத்திரிகையை— தபாலில் வந்தது—பார்த்த தும் ஆடிப் போனார். 'தஞ்சாவூர் டிகிரி காப்பி' என்ற போர்டை முறித் துப் பரணில் போட்டு விட்டார். இந்தப் பயலின் கை மணத்தை நம்பித் தனியே காப்பி செக்ஷன் ஆரம்பிக்க விருந்த இட்டத்தைக் கைகழுவினார். ஐயா யிரம் ரூபாய் முதலீட்டில் வாங்கிய எவர் சில்வர் டபரா தம்ளர் செட்டுகள் அத்தனை யிலும் சாமண்ணா காப்பி கிளப் பெயர் பொறிக்க அதிகப்படியான செலவு — புதுக் கருக்கு விழியாமல் அலமாரியில் கொலு ஏறின. அலமாரிக்கும் அந்த அறைக்கு மாகத் திண்டுக்கல் பூட்டுகளைப் போட்டுவிட்டு மன்னார்குடிக்குக் கிளம்பிப் போய்விட்டார். அண்ணாவை நேரில் போய் அழைக்க வேண் டும் என்று வந்த நடராஜனுக்கு ஏமாற்றம். சாமண்ணாவுக்கோ 'சாமண்ணா காப்பி கிளப்' என்று தாம்பரத்தில் கடை தொடங்கிய போது ஏற்பட்ட நம்பிக்கை தகர்ந்து போன அதிர்ச்சிக்கு மத்தியில் 'நம்ம பயல் விசுவாச மாகப் புதிய கடைக்கு இதே பெயரைச் சூட்டியிருக்கிறானே' என்ற மகிழ்ச்சி கொஞ் சம் ஆறுதலாகவே இருந்தது.

**தி**ருவல்லிக்கேணி—

'சாமண்ணா காப்பி கிளப்' திறப்பு விழா தினம். 'ஜே ஜே' என்று கூட்டம். காப்பி ருசிக்கென்று காலையும் மாலையும் மக்கள் வெள்ளம். கல்லா நிரம்பி வழிகிறது.

மாமனாருக்கு ஒரே மகிழ்ச்சி.

"முதல் நாளே வருமானம் ரெண்டா யிரத்து அறுநூத்தி அறுபது ரூபா மாப் பிள்ளே..." என்று பூரிக்கிறார்.

"ஐயாயிரத்து நூற்றி இருபத்தைந்தை யும் லாபத்தில் கூட்டிக் கொள்ளுங்கள்" என்கிறார் நடராஜன்.

மகனுக்கு வியப்பு; மாமனாருக்குத் திகைப்பு; மசாலாப் பாலை ருசித்துக் குடித்துக்கொண் டிருக்கும் நடராஜனின் கைகள் மட்டும் டபரா டம்ளரில் பொறிக்கப்பட்டிருந்த வாசகத்தை வருடிக் கொண்டிருக்கின்றன.




எம்.எஸ்.பெருமாள்

—''இந்த டபரா சாமண்ணு காப்பி கிளப்பில் திருடப்பட்டது'

—'இந்த டம்ளர் சாமண்ணு காப்பி கிளப்பில் திருடப்பட்டது'

—'இந்தத் தட்டு சாமண்ணு காப்பி கிளப்பில் திருடப்பட்டது.'

மன்னார்குடிக்குப் போயிருக்கும் சாமண்ணுவுக்குத் தாம்பரம் 'சாமண்ணு காப்பி கிளப்' பின் டபரா தம்ளர் தட்டு ஆகிய எவர்சில்வர் சாமான்கள் சூறையாடப்பட்ட விவரம் தெரிய நியாயமில்லை. சிஷ்யன் தம் மேல் வைத்திருக்கிற அபிமானத்தையும் மரியாதையையும் — சென்னையில் புதிய கடைக்கு 'சாமண்ணு காப்பி கிளப்' என்று கர்நாடகமாகப் பெயர் வைத்திருக்கிற விசுவாசத்தையும் மன்னார்குடியில் எல்லோரிடமும் சொல்லிச் சொல்லி ஆற்றிக் கொண்டிருக்கிறார்!

# பெண்ணின் வாழ்க்கை

● ஒரு ஊரில் ஒரு பிராஸ்தாரி .... என்று ஆரம்பித்தால் இப்படத்தின் கதையைச் சொல்ல ஒரு முழு கல்வி தேவைப்படும். ஏகப்பட்ட பேர் ஒருவருக்குள் ஒருவராக முடிச்சுப் போட்டுக் குழப்பிக் கொள்கிறார்கள்.

மொத்தம் 3 பெண்களின் வாழ்க்கை கதையில் அடிபடுகிறது. கதையின் முக்கிய பாகமான அந்தப் பெண்ணின் (அருணா) வாழ்க்கைக்கு அவ்வளவு முக்கியத்துவம் தராமல் விட்டிருக்கிறார்கள். அருணா (கல்லுக்குள் ஈரம்) பாவமான கேரக்டர். நவீன பெண்களுக்குப் பாடம் கற்பிக்கும் கேரக்டர். அருணாவை நடிக்க வைக்க மீண்டும் பாரதிராஜா வேண்டும். ரதி நடிப்பது போல் பாவ்லா பண்ணி விடுகிறார். காணாமல் போயிருந்த சுதாகர் எட்டிப் பார்க்கிறார். திரும்பவும் காணாமல் போக முயல்கிறார்.

என்ன மனஸ்தாபமோ ஒளிப்பதிவாளர் நிறைய இடங்களில் பழி வாங்கியிருக்கிறார். தேங்காய் பேசுவதற்கும் வரும் சப்தங்களுக்கும் தொடர்பேயில்லை. தாங்கள் எடுப்பது கலர்ப்படம் என்ற பிரக்ஞையின்றி ரத்தம் கொட்டும் காட்சியில் ரோஸ் கலர் திரவத்தை உபயோகிக்கிறார்கள்.

நிற்கும் காரில் ஸ்டியரிங்கை மட்டும் ஆட்டி, பின்னால் ஒரு படத்தை ஓடவிட்டு ஸ்டுடியோவிலேயே கார் ஓடும் அந்தக் கால யுக்தி இன்னும் தொடர்கிறது. ஆமாம் ரத்தி— ஸ்டியரிங்கை இந்த ஆட்டா ஆட்டுவது. தன் பிரின்ஸிபாலிடம் ''நான் கார் வரைக்கும் வரேன்'' என்று சுதாகர் (கார் பக்கத்திலேயே நிற்கிறது) கூறுவது போன்ற தேவையற்ற வசனங்கள்.

படம் ஹெவியாக இருந்தால் பாடல்கள் வந்து கொஞ்சம் ரிலாக்ஸ் பண்ணும். இங்கு பாடல்கள் ஏன் வருகின்றன என்ற அலுப்பு மேலிடுகிறது. படத்தில் ஆறுதலான சமாச்சாரம் நிலக்கடலை — கரும்புச் சாறு சைட் பிஸினஸ் பண்ணும் சுருளி.

டைரக்டரின் பெயரைத் தெரிந்து ஒன்றும் ஆகப்போவதில்லை. படத்தைப் பார்த்தும் கூடத்தான்.

— நளினி சாஸ்திரி



# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான்

## எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக—சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.




"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

## திட்டமிட்ட பரிபூரண உணவு

# காம்ப்ளான்®

# எங்கோ ஒரு எதிரி இருக்கிறான்!



ஸ்ரீரங்கம் நரசிம்மன்

"அரவிந்தா!"

"ம்...."

"தூக்கம் வரலியா? புரண்டு புரண்டு படுக்கறியே!"

"நீங்களும் தூங்கலியா?"

"நீ தூங்காம ஏதோ வேதனைப்படும்போது எனக்கு மட்டும் தூக்கம் வருமா?"

"வேதனை ஒண்ணுமில்லே.... ஆனா தூக்கம் வரல்லே..."

"கொஞ்ச நாளாவே நீ சரியாத் தூங்கறதில்லேன்னு நினைக்கிறேன்.... மனசுலே ஏதாவது கவலையா?"

"எனக்கென்ன கவலை?"

"சரி தூங்கு... நாளைக்கு டாக்டரைப் போய்ப் பார்ப்போம்..."

"இதுக்கெல்லாம் டாக்டரைப் பார்க்கணுமா?" என்ற அரவிந்தாவின் வார்த்தைகள் ரகுவின் காதுகளில் நுழையவில்லை; தூக்கம் அவன் விழிகளில் நுழைந்துவிட்டது. சில நிமிஷங்களுக்கெல்லாம் அவன் தூக்கம் மெல்ல ஒலிக்கவும் தொடங்கியது!

அரவிந்தா பக்கத்தில் படுத்திருந்த கணவனைத் திரும்பிப் பார்த்தாள். அழகும் அன்பும் நிறைந்த மனைவி பக்கத்தில் படுத்திருக்கிறாள் என்ற பெருமிதத்தில் மெய் மறந்து உறங்கிக் கொண்டிருந்தான் ரகு.

அவள் மனம் வேதனைப்பட்டது. வேதனையா அல்லது பயமா?...

அவர்களுக்குத் திருமணமாகி மூன்று வருடங்களாகின்றன. ரகு அவளிடம் உயிரையே வைத்திருந்தான். அரவிந்தாவும் தன்னுடைய பாக்கிய வசத்தால் இப்

ஓர் அன்பான கணவன் வாய்த்ததாக எண்ணிப் பழைய விஷயங்களையெல்லாம் மறந்து சந்தோஷமாக வாழ்ந்து கொண்டிருந்தாள். ஆனால், திடீரென்று இரண்டு மாத காலமாக அவள் நெஞ்சில் ஒரு பயம் உருவாகி அவள் நிம்மதியைக் குலைத்தது.

'பழைய விஷயங்கள் அவருக்குத் தெரிந்து விட்டால்? நம்மைப் பற்றி எவ்வளவு உயர்வாக எண்ணிக் கொண்டிருக்கிறார்! நம்மிடம் எவ்வளவு ஆசை வைத்திருக்கிறார்! எல்லாமே போய் விடுமோ?....'

திருமணமாகும்போதோ திருமணமாகி, இரண்டரை ஆண்டு வரையிலோ இல்லாத பயம், இப்பொழுது அவளை வாட்டி வதைத்தது.

நாளைக்கு டாக்டரிடம் போகலாமென்கிறார். தன்னுடைய நிலையை டாக்டரால் தீர்க்க முடியுமா?

மறுநாள் அரவிந்தாவை டாக்டரிடம் அழைத்துச் சென்றான் ரகு.

டாக்டர் ஒரு தூக்க மாத்திரையை எழுதிக் கொடுத்துவிட்டு, "இதைப் பழக்கமாக வைத்துக் கொள்ளக் கூடாது. அப்புறம் மாத்திரை இல்லாமல் தூக்கம் வராது. இயற்கையாகத் தூங்க முயற்சி செய்யணும்... ரொம்பவும் முடியாத நேரத்தில் ஒரு மாத்திரையைச் சாப்பிடவும்..." என்று உபதேசம் செய்தார்.

தினம் ஒரு மாத்திரையாக மூன்று நான்கு நாட்கள் சாப்பிட்டுவிட்டுத் தூங்கினாள் அரவிந்தா. ரகு ஆபீஸ் வேலையாகத் திருச்சி போக நேர்ந்தது. இரண்டு தினங்களில் திரும்பி வருவதாகவும் தைரியமாக இருக்கும்படியும் கூறிவிட்டுச் சென்றான்.

ரகு திருச்சி போகிறான் என்றதுமே, அரவிந்தாவின் வயிற்றில் புளியைக் கரைத்தது! திருச்சியில் ரகுவைப் பார்த்து யாராவது பழைய விஷயங்களையெல்லாம் சொல்லி விடுவார்களோ? மறு நாள் காலை

முதல் அரவிந்தா அனுபவித்த வேதனையைச் சொல்லி முடியாது. இனம் புரியாத ஒரு பீதி அவள் உள்ளத்தையும் உடலையும் நடு நடுங்க வைத்தது.

இன்றைய மனநிலையில் இரண்டு மாத்திரைகள் போதாதென்று தோன்றவே மூன்று மாத்திரைகள் எடுத்துக் கொண்டாள். இரண்டு மணி நேரம் மாத்திரைகள் வேலை செய்யத் தொடங்கவில்லை. இன்னொரு மாத்திரையையும் விழுங்கி விடுவோமா என்று எண்ணியவாறு படுத்திருந்தாள். கண்களில் ஒரு பாரம் அழுத்தியது. அவள் சிந்தனை மழுங்கியது. எங்கோ மிதப்பதைப் போல ஓர் உணர்வு. அப்புறம் ஒன்றுமே புரியவில்லை!

மறுநாள் காலை எட்டு மணிக்குத்தான் அரவிந்தா எழுந்தாள். அவள் விழிகள் திறந்தனவே தவிர, உணர்வுகள் விழிப்படைய வெகு நேரம் ஆயிற்று. இரவெல்லாம் நன்றாகத் தூங்கியதற்கான புத்துணர்ச்சியுடன் எழுந்திருக்காமல் ஒருவித சோர்வுடனேயே எழுந்து உட்கார்ந்தாள். அன்று முழுவதுமே ஓர் இயந்திரம் போல நடமாடிக் கொண்டிருந்தாளே தவிர, தூக்கக் கலக்கம் இன்னும் தெளியவில்லை. ஏதோ சமைத்தாள், சாப்பிட்டாள். அன்று இரவு மாத்திரை ஏதும் சாப்பிடாமலே படுத்தாள். மெய் மறந்து தூங்கியும் விட்டாள்.

அடுத்த நாள் காலை ரகு திருச்சியிலிருந்து திரும்பி விட்டான். நல்ல வேளையாக யாரும் அவனைச் சந்தித்து அரவிந்தாவின் பழைய கதைகளைச் சொல்லவில்லை போலும். அவன் சகஜமாகவே காணப் பட்டான்.



பத்து மணிக்கு வேலைக்கும் போய் விட்டான். 'அப்பாடா!' என்ற ஒரு நிம்மதிப் பெரு மூச்சு விட்டாள் அரவிந்தா.

பதினோரு மணிக்குத் தபால் வந்தது!

கடிதத்தை வாங்கியதுமே அரவிந்தா புரிந்து கொண்டாள், இது ஏதோ வேண்டாத தபால் என்று! அது ஒரு உள் நாட்டுக் கடிதம். கோணக் கோண விலாசம் எழுதப் பட்டிருந்தது. உள்ளே சென்று கடிதத்தைப் பிரித்தாள்.

''அரவிந்தா! ரகுவை மணப்பதற்கு முன் நீ யாரைக் காதலித்தாய், அவனுடன் எங்கெல்லாம் சுற்றினாய் என்பதையெல்லாம் உன் புருஷனிடம் சொன்னாயா?... சொல்லியிருக்க மாட்டாய்! தேவநாதன் இறந்து விட்டதால் இனி உன் வாழ்க்கையில் யாரும் குறுக்கிட மாட்டார்கள் என்ற தைரியமா? உன் காதலன் இறந்து விட்டானே தவிர, நீயும் அவனும் உறவாடினதையெல்லாம் பார்த்தவன் உயிரோடு இருக்கிறேன். கல்லணையில் அடித்த கூத்தெல்லாம் தெரியும்!''

கையெழுத்திடப்படாத ஒரு மொட்டைக் கடிதம். ஆனால், அதில் கண்டிருந்த விஷயங்கள் உண்மை. தேவநாதனைக் காதலித்தது உண்மை. அவனுடன் கல்லணைக்குச் சென்றதும், விருந்தினர் விடுதியில் தங்கியதும் உண்மை. ஆனால் அங்கு தவறாக எதுவும் நடக்கவில்லை. இதைச் சொன்னால் யாராவது நம்புவார்களா?

அரவிந்தாவின் கைகள் நடுங்கிற்று; உடல் நடுங்கிற்று; உள்ளம் நடுங்கிற்று.

'இந்த மொட்டைக் கடிதத்தை யார் எழுதியிருப்பார்கள்! இவ்வளவு நாள் அவன் என்ன செய்துகொண்டிருந்தான்?'

அன்று முதல் அரவிந்தா ஒரு நடைப் பிணமாகி விட்டாள். அவளுடைய இந்தத் திடீர் சோர்வுக்கும் உற்சாகமற்ற போக்கிற்கும் அவள் ஆரோக்கியத்தில்தான் ஏதோ கோளாறு என்று எண்ணினான் ரகு.

அவன் எவ்வளவு சொல்லியும் டாக்டர் வீட்டுக்குப் போக மறுத்து விட்டாள் அரவிந்தா. ஒரு போலியான புன்னகையையும் உற்சாகத்தையும் வரவழைத்துக் கொண்டு ''எனக்கு ஒன்னுமில்லே... ஆரோக்கியமாத்தான் இருக்கேன்... டாக்டர், மருந்து எல்லாம் எதுக்கு?'' என்று கூறிவிட்டாள்.

ஒரு நாள் ரகு வேலையிலிருந்து திரும்பியதும், ''அரவிந்தா! எங்கள் ஆபீஸில் வேலை செய்பவர் ஒருவர் இறந்து விட்டார். உடல் இன்னும் ஆஸ்பத்திரியிலேயே இருக்கிறதாம். அவர் வீட்டில் உதவிக்கு மனிதர்கள் இல்லையாதாம். நானும் இரண்டொரு நண்பர்களும் போய்த்தான் எல்லாவற்றையும் கவனிக்கணும். அநேகமாக ராத்திரி வீடு திரும்ப மாட்டேன். ஜாக்கிரதையாயிரு'' என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

அன்று மாலை தபாலில் இரண்டாவது கடிதம் வந்தது. இதுவும் உள்நாட்டுக் கவர்தான். அதே கோணக் கோணக் கையெழுத்து! பிரித்துப் பார்த்தாள்.

'அரவிந்தா! கூடிய சீக்கிரம் நான் கேட்பதைக் கொடுக்கத் தயாராக இரு!' — அவ்வளவுதான். கையெழுத்தில்லை.

'நாசமாப் போறவன்.. விட மாட்டான் போலிருக்கே!... என்ன கேட்டுத் தொலைக்கப் போறான்?....'

இரண்டாவது கடிதம் வந்த பத்தாவது நாள், மாலைத் தபாலில் மூன்றாவது கடிதம் வந்தது. அன்று ரகு வேலைக்குப் போகவில்லை. அவனே தபாலை வாங்கினான். பக்கத்தில் நின்று கொண்டிருந்த அரவிந்தா, தவித்தாள். இம்முறை வெறும் தபால் கார்டுதான்.

''அரவிந்தா!...நான் கேட்கப் போவதைக் கொடுக்காவிட்டால்... கொடுப்பாயில்லையா?''

கலங்கிப் போயிருந்த அரவிந்தாவைப் பார்த்தான் ரகு. அவள் கண்கள் மடமடவென்று நீரைக் கொட்டின. தபால் கார்டைக் காட்டி ''இது என்ன அரவிந்தா?'' என்றான். அரவிந்தா பதில் சொல்லாமல் உள்ளே சென்று எங்கோ செருகி வைத்திருந்த மற்ற இரண்டு கடிதங்களையும் கொண்டு வந்து கொடுத்தாள். அவன் படித்து முடித்ததும், ''தேவநாதனுடன் நான் பழகியதென்னவோ உண்மைதான். ஆனா, வெறும் பேச்சு வார்த்தையோடு சரி. சத்தியமா நான் கெட்டுப்போகல்லே...'' என்றாள். மேற்கொண்டு பேச முடியாமல் துக்கம் பீறிட்டு வந்தது. தேம்பித் தேம்பி அழுதாள்.

''இப்ப எதுக்கு அழறே?... உன்னை எனக்குத் தெரியாதா?... நீ பரிசுத்தமானவள்னு எனக்குத் தெரியும். நீ தேவநாதனோடு பழகியதும் எனக்குத் தெரியும்....'' என்றான் ரகு.

''எப்படி?''

''ஒரு பெண்ணுக்குக் கல்யாணம்னு அவள் நடத்தையைப் பற்றி மொட்டைக் கடிதங்கள் எழுதறதுக்குன்னே சில புண்ணியாத்மாக்கள் இந்த உலகத்திலே இருக்கு. அது மாதிரி ஒரு புண்ணியாத்மா நம்ம கல்யாணம் நிச்சயமானதுமே, எனக்கு ஒரு

''அஞ்சு பார் சோப்பு வாங்கினா ஒரு பை இலவசம். அஞ்சு பை வாங்கினால் ஒரு டூத் பிரஷ் இலவசம். அஞ்சு டூத் பிரஷ் வாங்கினால் ஒரு பாக்கெட் பேஸ்ட் இலவசம். அஞ்சு பாக்கெட் பேஸ்ட் வாங்கினால் ஒரு பார் சோப்பு இலவசம் சார்!''

''தலையைச் சுத்துதுப்பா!''

''அஞ்சு பாக்கெட் பிளேடு வாங்கினால் ஒரு பாக்கெட் 'தலை சுத்தல்' மருந்து இலவசம் சார்!''

— அ. இராமதாஸ்



# டெட் கட்டி உபயோகியுங்கள், வெண்மையை நாடுங்கள்

இன்று முன்னைவிட
ஏராளமான மக்கள்
டெட் கட்டியின்
சிறப்பான சலவையை
விரும்புகிறார்கள். இது
பளிச்சிடும் வெண்மை
தருகிறது, அதிக நாள்
உழைக்கிறது,
மிகவும் சிக்கனமானது
என்கிறார்கள்.




# டெட் கட்டி

Shilpi dm-41/80 tam



Dr. S. R. சிவராஜ்

எச்சரிக்கை விட்டது. தெரிந்தவர்கள் மூலம் விசாரிச்சதிலே நீ தேவநாதனேடு பழகினது உண்மை என்றாலும் தப்பு வழிக்குப் போகாதவள், நல்ல பெண் என்றெல்லாம் தெரிந்தது. அதுக்கப்புறம் கல்யாணமானதும், நீ எவ்வளவு புனிதமானவள் என்பதை நானே புரிந்து கொண்டேன். இதுக்காகவா இவ்வளவு நாளும் பயந்தே? இனிமே தூக்க மாத்திரைகளைச்சாப்பிடாதே. இனிமே இது மாதிரிக் கடிதமும் வராது!'' என்றான் ரகு. வியப்புடன் அவனைப் பார்த்தாள் அரவிந்தா. அவள் பார்வையில் ஒரு சந்தேகம் மறைந்திருந்தது.

''அப்போ இந்தக் கடிதங்களை... நீங்க தான் எழுதினீங்களா?'' என்றாள். ரகு மெல்லச் சிரித்தபடி ''இல்லே... இந்தக் கடிதங்களை எழுதினது நீயேதான்!'' என்றான்.

''என்னது? எனக்கு நானே மொட்டைக் கடிதங்கள் எழுதினேனா?... என்னைப் பைத்தியமாக்கறீங்களா?....''

''நிஜம்தான் அரவிந்தா. நேற்று ராத்திரி ஒரு மணி இருக்கும். நீ படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாய். எனக்குத் தூக்கம் கலைந்து விட்டது. 'ஏன் எழுந்துட்டே? தூக்கம் வரலியா?'ன்னு கேக்க நினைச்சேன். அதே சமயம் நீ எழுந்து கனவில் நடப்பதைப் போல நடந்து மேஜையின் முன்பு நாற்காலியில் போய் உட்கார்ந்தாய். சில நிமிஷங்கள் என்ன செய்கிறாய் என்று படுத்தபடியே பார்த்துக் கொண்டிருந்தேன். என் டயரியைப் பிரித்தாய். அதிலிருந்து ஒரு தபால் கார்டை எடுத்து மேஜை மீதிருந்த என் பேனாவால் ஏதோ எழுதவாரம்பித்தாய். இந்த வேளையில் யாருக்குக் கடிதம் எழுதுகிறாய் என்று தோன்றிற்று. அதை விட ஆச்சர்யம், நீ கார்டில் இடது கையால் எழுதிக் கொண்டிருந்தாய். சத்தடி செய்யாமல் மெள்ளப் பின்னால் வந்து பார்த்தேன். அப்பொழுது நீ விலாசம் எழுதிக்கொண்டிருந்தாய். — உன் விலாஸம்! எழுதி முடித்ததும் பேனாவை மூடி வைத்து விட்டுக் கதவைத் திறந்து கொண்டு வெளியே போனாய். நீ நடந்த தோரணையிலிருந்தே சுய நினைவுடன் நடக்கவில்லை என்று தெரிந்தது. வாசற்படி இறங்கியதும் வலதுபக்கம் திரும்பி நடந்தாய். அவசரம் அவசரமாகக் கதவைப் பூட்டிக் கொண்டு உன் பின்னாலேயே நானும் வந்தேன். தெருக் கோடியில் உள்ள தபால் பெட்டியில் கார்டைப் போட்டுவிட்டுத் திரும்பினாய். நீ பார்க்காத வண்ணம் தெருவோரமாக வந்து வீட்டைத் திறந்து உள்ளே வந்து படுத்துக் கொண்டேன். நீ உள்ளே வந்ததும் கதவைத் தாளிட்டு விட்டுக் கட்டிலில் வந்து படுத்தாய்!...'' என்று சொல்லி முடித்தான். சில நிமிஷங்கள் ஒன்றும் தோன்றாமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு ''அப்போ எனக்குத் தூக்கத்திலே நடக்கிற வியாதியா?'' என்றாள்.

''நான் அப்படி நினைக்கல்லே... உன்னையறியாமலேயே உன் உள்ளத்தில் ஒரு பயம், குற்ற உணர்வு அழுந்திக் கிடந்திருக்கிறது. உனக்கு எதிரிகள் இருப்பது போலவும், அவர்கள் உன்னைப் பழிவாங்கக் காத்திருப்பது போலவும் நீயே கற்பனை செய்து கொண்டிருக்கிறாய். சாதாரணமாகப் பெண்களிடம் பிளாக் மெயில் செய்பவர்கள் பணம் கேட்பதும், தனக்கு இணங்குமாறு பயமுறுத்துவதும் எவ்வளவோ கதைகளிலும் சினிமாக்களிலும் பார்த்த விஷயம். உன் எதிரி என்ன செய்வான் என்று உனக்குத் தெரியாது. எப்போ, எந்த ரூபத்தில் உனக்குக் கஷ்டம் வருமோ என்ற பயத்தில் பல நாட்களாக உன்னுடைய உள்ளுணர்வு தூங்காமலே இருந்திருக்கிறது. தூக்க மாத்திரைகளை அதிகமாக எடுத்துக் கொண்டதும் உன் நினைவு மழுங்கியதே தவிர, தூங்கவில்லை. மயங்கிய நிலையில் தூங்குவது போல் கிடந்திருக்கிறாய். அப்பவும் உன் கற்பனைகள் ஓயவில்லை. எங்கோ இருப்பதாக நீ நினைத்த எதிரி, என்ன செய்வான் என்பதை உன் மயக்கத்தில் நீயே செய்து கொண்டிருக்கிறாய்! அவன் என்ன கேட்பான் என்று உனக்குத் தெரியாது. அதனால் கடிதத்தில் அதைப் பற்றிக் குறிப்பிடவில்லை.... நேற்று சாயங்காலம் மாத்திரைப் பாட்டில்களில் ஆறு மாத்திரைகள் இருந்தன. காலையில் பார்க்கிறேன் இரண்டுதான் இருந்தன... ஆக நாலு எடுத்துக் கொண்டிருக்கிறாய்'' என்றான்.

''தூக்க மாத்திரை சாப்பிட்டால் இப்படியெல்லாம் நடக்குமா? நான் கேள்விப்பட்டதே இல்லையே!'' என்றாள் அரவிந்தா.

''உயிரைக் காக்கக் கூடிய சில மாத்திரைகள் சிலரைக் கொன்றே விடுகிறது. சில மருந்துகள் சிலருக்கு அலர்ஜி! சில மருந்துகள் சாப்பிட்டால் புதுசா சில கோளாறுகள் ஏற்படுகிறது. எல்லோருடைய உடம்பும் ஒரே மாதிரி இல்லையே! உன்னைப் பொறுத்தவரை தூக்க மாத்திரைகள் தூக்கத்தைக் கொடுக்கவில்லை. மூளையைப் பாதித்திருக்கிறது. அதனால்இனிமே எந்தப்பயமும் இல்லாமல் மாத்திரை எதுவும் சாப்பிடாம நிம்மதியாத் தூங்கு... உனக்கு யாரும் எந்தக் கெடுதலும் செய்ய முடியாது. உன்னிடம் எனக்குள்ள அன்பை எந்த சக்தியாலும் குறைக்க முடியாது!'' என்று கூறியவாறு அன்புடன் அவளை அணைத்துக் கொண்டான். அந்தக் கணமே அரவிந்தாவின் பயம், இனி எல்லாம் எங்கோ பறந்து விட்டன!



''கடைக்காரர்களிடம் நம்மைப் போன்றவர்கள் விலே கேட்பதற்கும் அழகான பெண்கள் விலே கேட்பதற்கும் வித்தியாசம் இருக்கிறது!''

''....எப்படி?''

''அவர்கள் கேட்கும் போது 'கண்களை மூடிக் கொண்டு' விலே சொல்ல மாட்டான்!''

எஸ். பானு

சென்ற ஆண்டு இந்த ஜூன் மாத தொடக்கத்தில் தான் தமிழகத்தில் தேர்தல் முடிந்து திரு எம். ஜி. ஆர் மீண்டும் பத விக்கு வந்தார். அவர் ஆட்சிக் காலத்தின்











ஓர் அம்சத்தை விமர்சிக்கும் கார்ட்டூன் வரைந்து தருமாறு பல்வேறு கார்டூனிஸ்டு களை அணுகினோம். எதனால் இந்த அம்சத்தைத் தேர்ந்தெடுத்தார் கார்டூனிஸ்ட்?

விளக்கம் 56 பக்கம்







# எம்.ஜி.ஆர் ஆட்சி—கார்ட்டூனிஸ்ட்கள் கண்ணோட்டம்!



# அந்த நபர் யார்?



✖ வி. என். புஷ்கலா, பாலக்காடு
கே. எல்லா பத்திரிகைகளிலும் ஒரே போட்டி மயமாக இருக்கிறதே?
ப: நல்லதுதான். வாசகர்களிடமும் திறமை இருக்கிறது என்பதை உணர்ந்திருக்கிறார்களே, அதற்காக மகிழ்ச்சி. இங்கிலாந்தில் 'நியூ ஸ்டேட்ஸ்மென்' என்று ஒரு வார இதழ் வெளியாகிறது. அதில் 20, 30 வருடங்களாக வாரந்தோறும் ஒரு போட்டி வருகிறது. தாராளமாகப் பரிசும் கொடுக்கிறார்கள். மிகவும் சுவையான பகுதி இது.

✖ வி. எம். சையதுபுகாரி, அதிராம்பட்டினம்
கே. ஒரு மாநிலத்தின் தலைநகரை மாற்றினால் அந்த மாநிலம் முன்னேறி விடுமா?
ப: மாநிலம் முன்னேறுமோ இல்லையோ, புதிய தலைநகர் முன்னேறுவது நிச்சயம்.

✖ எஸ். தேவாதிராஜன், கும்பகோணம்
கே. கடவுள் நம்பிக்கைக்குக் காரணம் என்ன?
ப: வாழ்க்கை என்ற பரந்த வெளியில் பயணம் செய்யும் அனைவருக்கும் ஏதாவது ஒரு பற்று இருந்தால்தான் தைரியமும் செயல் திறனும் ஏற்படும். அதனால்தான் கடவுளின் மேல் நம்பிக்கை வைக்கிறோம். கடவுளைவிட அந்த நம்பிக்கையே நமக்கு மனோ திடத்தையும் கஷ்டங்களைச் சமாளிக்கும் மனப்பாங்கையும் தருகிறது. நமது சஞ்சலங்களையும் துயரங்களையும், கவலைகளையும் நம்மிடமிருந்து கழற்றி மாட்டி வைக்க உதவும் கோட் ஸ்டாண்ட் கடவுள் நம்பிக்கை.

✖ எஸ். எல். பி. குமார், பெங்களூர்-21
கே. கடுகு.. சார் (ஐஸ் அல்ல) கடைகளில் கடுகு வாங்கும் போது கேழ்வரகைக் கலந்து கொடுத்து விடுகிறார்களே?
ப: கலப்படமில்லாத கடுகு 'கல்கி' கடுகுதான் என்று இப்போதாவது தெரிந்து கொள்ளுங்கள். (ஆமாம், சார் என்று சொல்லி விட்டால் 'ஐஸ்' ஆகிவிடுமா? உலக மகா மேதை, கேள்வி - பதில் திலகம், அறிவுக் களஞ்சியம், நகைச்சுவைக் குதிர் என்றெல்லாம் எத்தனையோ வாசகர்கள் எழுதுகிறார்கள். அதையெல்லாம் ஐஸாகக் கருதாதவன் நான். உங்கள் 'சார்' ஒரு சாதாரண குச்சி ஐஸ்!)

✖ டி. கொண்டுரெட்டி, வேலிடுபட்டி
கே. கவிஞனுக்கும் புலவனுக்கும் உள்ள வேறுபாடு என்ன?
ப: புலவன் இலக்கணத்தை வைத்து எழுதுவான்; கவிஞன் இதயத்தை வைத்து எழுதுவான்.

**கடுகு பதில்கள்**

✖ கே. உமா மகேஸ்வரி, சென்னை-4
கே. 'சிறந்த கேள்விக்குப் பரிசு சிறந்த பதில்தான். இதைத் தர முடியாதவர்கள்தான் வேறு பரிசு கொடுப்பதைப்பற்றி யோசிக்க வேண்டும் என்று ஒரு கேள்வி-பதிலில் ஒரு ஆசிரியர் எழுதியிருப்பதைப் பார்த்தீர்களா?
ப: பார்த்தேன். சரியாகத்தான் கூறியிருக்கிறார். 'கடுகு பதில்' பகுதியில் 'சுமாரான கேள்விக்குத்தான் பரிசு கொடுக்கப்படுகிறது' என்பதை ஒவ்வொரு இதழிலும் பரிசு பெறாத நேயர்கள் கூறுவது உங்களுக்குத் தெரியாதா?

✖ கே. ராமலிங்கம், பங்காரபேட்டை
கே. கல்கி கடைசிப் பக்கத்தில் ம. பொ. சி. கட்டுரையில் தாடி மீசையுடன் படம் வருகிறதே அந்த நபர் யார்? பாரதியாரா வேறு யாராவதா?
ப: பாரதியார்தான். இன்று பாரதியார் படத்தைப் பார்த்து யார் படம் என்று பலருக்குத் தெரியவில்லை என்பதைத் தமிழ் வளர்க்கும் பெரியவர்கள் கவனிக்க வேண்டும்.

✖ ஆர். பார்த்தசாரதி, பெரம்பூர்
கே. படுக்கும் அறையையும் படிக்கும் அறையையும் 'பள்ளியறை' என அழைப்பதேன்?
ப: இரண்டு இடத்திலும் தூக்கம் இடம் பெறுவதால்!

✖ மு. கலியாணசுந்தர், மேட்டுப்பாளையம்
கே. வாழ்க்கை என்பது வியாபாரமானால் அதில் காதல் என்பது...
ப: கொசுறு!

பரிசு பெறுபவர் :

எஸ். தேவாதிராஜன்
14, ஐயங்கார் தெரு,
கும்பகோணம்-612 001



புதிய

# ஃபேப்

டிட்டர்ஜெண்ட் கட்டி

## வெளுக்கிறது உங்கள் துணிகளை அதிகத் தூய்மையாக

அதிக வெண்மையாக

அதிக பிரகாசத்துடன்

### விசேட பளிச்சிட வைக்கும் சக்தியை உள்ளடக்கிய உன்னத ஃபார்முலா.

புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டியின் சக்திவாய்ந்த
நுரைவளம் ஆழ ஊடுருவிச் சுத்தம் செய்து விடாப்பிடியான
அழுக்குகளையும் அறவே அகற்றுகிறது.
அதன் விசேட பளிச்சிட வைக்கும் சக்தி வெள்ளைத்துணிகளை அதிக
வெண்மையாக்குகிறது— வண்ணத்துணிகளை அதிகமாக
பிரகாசிக்க வைக்கிறது—
உங்கள் துணிகளுக்கு தூய்மை கலந்த புதுமணம் தருகிறது.

அது கசிவற்றது—எனவே அதிக துணிகளை வெளுக்கிறது—
உங்களுக்கு சிறந்த சிக்கனம்.

**இணையில்லா வெண்மையும், ஈடில்லா பிரகாசமும் தரும் சலவைக்கு–புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டி!**




தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் கிடைக்கிறது.

கோல்கேட்–பாமோலிவ்
தரமான அளிப்பு

# 'பாதி' காப்பு!



ஜி. வேதா

விஸ்வேஸ்வரிக்கு 'ஜில்'லென்று முகம் கழுவிக் கொண்டது சுகமாகத்தான் இருந்தது. கண்ணின் மூலையில் கரிப்பாய்த் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்த சோப் நுரையைத் தண்ணீரால் அடித்து விரட்டினாள்.

சே! வழக்கம்போல் இன்றும் டவல் எடுத்து வர மறந்தாயிற்று. இடது கை ஆள்காட்டி விரலைக் கன்னம் வழியே முகவாய்—கழுத்து என்று இறக்கி நீரைத் தற்காலிகமாய்க் குறைத்தவாறு ஹாலுக்கு வந்தாள் விஸ்வேஸ்வரி. ஊஞ்சலாடிக் கொண்டிருந்த பச்சைத் தேங்காய்ப்பூ டவலை உருவி—

டிங்....டாங்...

காலிங் பெல். யாராய் இருக்கும்? இரண்டுங்கெட்டான் நேரம். பிரவீணாகூட ஐந்தரைக்குத்தானே வருவாள்? இன்றைக்குத் திங்கட் கிழமை கேம்ஸ் உண்டே!

டவலால் முகத்துக்கு ஒத்தடம் கொடுத்தவாறு கதவை நோக்கி விரைந்தாள். திறந்தவுடன் திகைப்போ திகைப்பு. இவனா! இந்த நேரத்தில் அவள் எதிர்பார்த்திருக்கக் கூடிய கடைசி மனிதன் இவனாய்த்தான் இருக்கும்! கண்ணிமைகள் கூட விஸ்வேஸ்வரியுடன் ஒத்துழைக்க மறுத்தன.

''வா....வாங்க கண்ணன்...சௌக்கியமா உள்ளே வாங்க...'' திகைப்பையும் மகிழ்ச்சியையும் சமவிகிதத்தில் கலந்து தெளித்த மாதிரி முகத்தில் ஒரு பாவம்.

''ஹலோ விசு! எப்படி இருக்கே?'' — உரிமையுடன் விசாரித்தவாறு ஷூவின் லேஸ்களைக் கழற்றினான்.

''சந்தோஷமாய் இருக்கியா விஸ்வேஸ்வரி?''

அவனுக்குப் பதில் சொல்வதற்குள் அவளுக்கு அடுத்த அறையில் ஒரு சின்ன வேலை பாக்கி யிருந்தது. அவசரம் அவசரமாய்ப் போய்ச் செய்துவிட்டு விரைந்து வந்தாள். இந்தக் கேள்வி அவனிடமிருந்து வருகிறதென்றால் அதன் அர்த்தம்....? திணறினாள்.

ஷூவிற்கு விடுதலை. வாசற் படியில் குனிந்து உள்ளே வந்தான். ஆறடிக்கும் மேலே உயரம். அழகு என்று சொல்ல முடியாது. ஆனால் கன கம்பீரம். ராணுவக்காரர்களுக்கே உரிய நடை. கூலிங் கிளாசைச் கழற்றியவாறு நடந்தான்.

''சௌக்கியம்தான் கண்ணன். நீங்க?'' எச்சிலை விழுங்கியவாறு விசாரித்தாள்.

வழக்கம்போல் அட்டகாசமான சிரிப்பு. ''ஓ எஸ். எனக்கு என்ன குறைச்சல்? ஐ ஆம் வெரி ஃபைன். குடும்பம் குழந்தை குட்டின்னு எந்த நச்சரிப்பும் கிடையாது. நிம்மதியாய்ச் சம்பாதிச்ச பணத்தையெல்லாம் என் ஒருத்தனுக்கே அபிஷேகம் பண்ணிக்கறேன். வட இந்தியாவின் கபடமற்ற ஜனங்கள் மத்தியிலே மனசு சந்தோஷம் ரெண்டு பங்காறது!'' — மகிழ்ச்சியாய்ச் சொல்வது போல் சொன்னாலும் பின்னணியில் ஏக்கம் டிசைன் போட்டிருந்தது. எனக்கு யாருமே கிடையாது என்று புலம்புவது போல் ஒரு டிப்ரஷன்! கல்யாணம் பண்ணிக்கொள்ளவே மாட்டேன் என்று வீருப்பாக வல்லவா இருக்கிறான்!

அவன் ஒண்டிக் கட்டை. அதற்கு ஒரே காரணம் அவள்! அவளேதான் — விஸ்வேஸ்வரி! மாமா பெண் விஸ்வேஸ்வரியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று அவன் எத்தனை ராத்திரிகள் கனவு கண்டிருப்பான். பகல் கனவுகளாகி விட்டனவே! அவள் இன்றைக்கு யாருக்கோ சொந்தமாகி.... ஹூம்!

அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். சலவைக் கல் மேடையைக் கழுவித் துடைத்து விட்ட மாதிரி இருந்தது முகம். டிரஸ்ஸிங் டேபிள் முன்னால் உட்கார்ந்தாள். லேசாய்ப் பவுடரை எடுத்து முகத்துடன் உறவு செய்தாள். இழுத்துப் போர்த்தின தலைப்பு கொஞ்சமும் நகராமல்....!

''நீங்க எப்பக் கண்ணன் மெட்ராஸ் வந்தீங்க? எத்தனை நாள் ட்ரிப்?''

''சொன்னால் நீ நம்பக்கூட மாட்டே விசு! முந்தாநாள்தான் வந்தேன். நாளைக்கு ஃப்ளைட்டில் போகிறேன். டெல்லி போய் அங்கிருந்து நேப்பாளம் போறதா உத்தேசம்.... இன்ஃபாக்ட்... ஆறு வருஷம் கழிச்சு மெட்ராஸ் வர்றவனுக்கு உரிய உற்சாகம் எனக்கு இல்லை விசு! எந்தச் சொந்தக்காரங்களையும் பார்க்கலை. உன்னை...உன்னை மட்டும் பார்க்காமல் போக மனசு வரலை! நீ கல்யாணம் ஆகி இந்த வீட்டுக்கு வந்தப்போ ஒரு தடவை வந்தேன் இங்கே! இந்த ஞாபகத்துலே இப்போ வழி லேசாய்த் தெரிஞ்சு வந்திருக்கேன். உனக்கு இஷ்யூஸ் ஏதும் உண்டா? உன் புருஷன் எப்போ வருவார்? ஆபீஸ்லேருந்து வர நாழியாகுமா?''

எதிரில் அவள் எப்போதோ கொண்டு வைத்திருந்த ஐஸ் வாட்டரை எடுத்து மடமடவென்று குடித்தான். கடமை தீர்ந்து விட்ட மாதிரி!

டிரஸ்ஸிங் டேபிளின் இழுப்பறைகளில் தேடினாள். குங்குமத்தைக் காணவில்லை. பிரவீணா படுக்கை நிலையில் கிடத்தி வைத்திருந்த விரல் நீள சிங்கார் சாந்து பாட்டில்

கிடைத்தது. அதிலிருந்து அபாய நிறத் திரவத்தைப் பொட்டாக எடுத்து நெற்றிக்குச் சாத்தினாள். சதுரம் — முக்கோணம் என்று என்னென்னவோ வந்ததே தவிர வட்டம் டபாய்த்தது. நடுக்கம்! அப்படி இப்படி வளர்த்தித் தேவைக்கும் கொஞ்சம் பெரிய சைஸிலேயே பொட்டு அமைந்தது. இனி மேல் பேசலாம்! அசைந்தால் பாதகமில்லே!

''எனக்கு ஒரே ஒரு பொண்ணு மட்டும் தான். அவர்.... அவர்... பிஸினஸ் டூர் போயிருக்கார். நாளன்னிக்குத்தான் வருவார்.''

''பெண்! என்ன பேர்?''

''பிரவீணு! இன்னிக்கு இருந்து சாப்பிட்டுப் போகலாமே கண்ணன்'' — ஏதோ ஒரு அசட்டுத் தைரியம். கேள்வியை சன்றது. கொஞ்ச நேரம் முன்னால் பூக்காரியிடம் வாங்கிய ஜாதிப்பூ தலையில் இடம் பிடித்தது.

''ஓ நோ! நான் இங்கே சில பழைய சர்ட்டிபிகேட்ஸ் வாங்க மெட்ராஸ் வந்திருக்கேன். இன்னும் கொஞ்சம் வேலைகள் சொச்சம் இருக்கு. இனி மேல் எப்ப வருவேனோ, எனக்கே தெரியாது. எந்தச் சொந்தக்காரங்க கூடவும் கரெஸ்பாண்டன்ஸ் கூடக் கிடையாது! அப்படி ஒரு நாடோடிப் பிழைப்பு நம்ப ராணுவத்திலே! எங்கே... உன் பொண் போட்டோ எதுவும் இருந்தால் காட்டு, பார்ப்போம்!''

ஆல்பம் விரிந்தது. பிரவீணு வி ஸ்வேஸ்வரியின் கார்பன் காப்பியாய்ச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

''இவதான் பிரவீணு!''

''மை குட்னஸ்! நீயேதான். உன் பெண்ணு உரிச்சு வெச்சிருக்கே!''

—'டிங் டாங்'

''மம்பி?....''

விஸ்வேஸ்வரியின் முகத்தில் கலவரம். இந்தப் பெண் எப்படி இன்னைக்கு இத்தனை சீக்கிரம்... கடவுளே! கடவுளே!

''மம்பி இன்னிக்கு அந்த அல்ட்டி உஷா என்ன தெரியு—'' அம்மாவை நிமிர்ந்து பார்த்தவள் கண்களை விரித்தாள். ''அய்! நீ இன்னிக்கு ரொம்ப ஸ்வீட்டா இருக்கேம்மா! எத்தனை அழகாய் இருக்கே!''

''சரிசரி... போய் டிரஸ் சேஞ்ச் பண்ணு.''

இத்தனை அழகாய் இருந்தும் ஏன் இத்தனை கடுகடுப்பு அவள் முகத்தில்?

''இங்கே வா பிரவீணு... இந்த அங்கிள் உனக்குப் பிடிச்சிருக்கா?'' நட்பு விளையாடிய குரலில் அழைத்தான் கண்ணன்.

''நீங்க அழகாய் இருக்கீங்க அங்கிள். ஆனால் உங்க மீசைதான் எனக்குப் பிடிக்கல்லே.''

கிட்டத்தட்ட அரை மணி நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுக் கிளம்பினான். இனி மேல் எத்தனை வருடங்கள் கழித்து வருவானோ! குழந்தை அவனிடம் நன்றாய் ஒட்டிக் கொண்டு விட்டது. வந்தவுடன் போஸ்



வாங்கிய 'தாலோ என்னவோ அம்மாவிடம் அதிகம் பேசிக் கொள்ளவில்லே, பிரவீணு.

''ஸீயூ விசு. பைபை மை டியர் பிரவீணு! அங்கிளுக்கு கிஸ் குடு.'' — வாங்கிக்கொண்டு வாசல் தாண்டி இறங்கினுன்.

விஸ்வேஸ்வரி ஹாலேத் தாண்டி வராந்தாவுக்குக் கூட வரவில்லே. அங்கிருந்தே விடை கொடுத்தாள்.

அவன் தெருக் கோடி தாண்டியிருக்க மாட்டான். கதவைச் சாத்திஞள். பூஜை அறையை நோக்கி ஓடினுள். அவசரமாய்த் தலேயில் இருந்த பூவை அவிழ்ந்து வைத்தாள். நெற்றியை அழித்தாள். கொஞ்ச நேரம் முன் கண்ணனுக்குத் தெரியாமல் கழற்றி வைத்த மாலேயை மறுபடியும் கணவன் படத்துக்குச் சாத்திஞள்.

''என்னே மன்னிச்சுடுங்க... கண்ணனுக்கு என் நிலேமை தெரிஞ்சு அந்த நல்ல மனத்தில் எந்தத் தப்பான எண்ணமும் ஏற்பட்டு எனக்கு ஆபத்தில் கொண்டு விட்டுடக் கூடாதேன்னுதான் நீங்க இறந்ததை அவன் கிட்டே சொல்லலே.... எனக்கு வேறே எந்தப் பாதுகாப்பு வழியும் தெரியலே...'' தலேயில் அடித்துக் கொண்டு அழுதாள் விஸ்வேஸ்வரி. போர்த்திய தலேப்பு நழுவி வெறும் கழுத்துக்கு வெளிச்சம் போட்டது.

அம்மா கொஞ்ச நேரம் முன்னுல் அழகாய் இருந்தாளே. இப்போது மீண்டும் ஏன் பழையபடி ஆகிவிட்டாள் என்று புரியாமல் திகைத்துக்கொண்டிருந்தது அந்தப் பிஞ்சு வாரிசு.

அப்போது....

'டிங் டாங்' — காலிங் பெல்.

மறந்து வைத்துப்போன தன் கூலிங் கிளாஸை எடுத்துப் போவதற்காகத் திரும்பி வந்த கண்ணன் கதவுக்கு வெளியே காத்திருந்தான்!

---

# பாக்குத் வெத்தலை

மூன்னேறி வருகிறது தமிழ் சினிமா என்று பீற்றுபவர்களுக்குச் சரியான சவுக்கடி கொடுத்திருக்கிறுர் புதிய இயக்குனர் வைரவன்.

ஏராளமான + தாராளமான செக்ஸ், அள்ளித் தெளித்த இரட்டை அர்த்தமுள்ள ஆபாசமான வசனங்கள், கொஞ்சம் கதை, பேயாட்டம் ஆடும் ரிப்ளக்டர்களுடன் கலர் காமிரா எல்லாம் சேர்ந்த மட்டமான (சராசரி என்று சொல்லுதல் மாபாவம்) படம். தான் செய்த காரியத்தை சிம்பாலிக்காகக் கயிறு இரிக்கும் காட்சியின் மூலம் அடிக்கடி சொல்கிறுர் டைரக்டர்.

எப்படியெல்லாம் எடுக்கக் கூடாது என்பதற்கு, இன்ஸ்டிட்யூட் மாணவர்களுக்கு இந்தப் படம் நிச்சயம் உதவும். அந்த வகையில் இது ஒரு கலேக் களஞ்சியம்.

—''சிந்து ஜீவா''






## 27. கிளை முறியும் புளியமரம்

காங்கிரஸில் பிளவு என்பது காங்கிரசுக்கோ உலகத்துக்கோ புதியதல்ல. உட்கட்சிப் பூசலாலேயே உருத் தெரியாமல் போனது காங்கிரஸ் ஒன்றுதான்.

காங்கிரஸில் ஒவ்வொருவருமே தலைவர்கள். நூறு தலைவர்களுக்கு நூறு அபிப்பிராயங்கள். ஒவ்வொருவரும் தங்கள் கருத்தையே மற்றவர்கள் மீது திணிக்க முயல்வார்கள். தகராறு ஆரம்பமாகிக் கட்சி உடையும்.

விடுதலைப் போராட்ட காலத்திலிருந்து இந்தப் பிளவுகள் சர்வ சாதாரணமாகத் தோன்றி இருக்கின்றன.

ஒன்றை நினைவு கூர்ந்தால் இது விளக்கமாகத் தெரியும். காங்கிரஸ் ஒன்றுதான் முதல் அரசியல் கட்சியாக இந்திய மண்ணில் தோன்றியது. அது தோன்றும்போது வேறு கட்சிகளே இல்லை.

காங்கிரசுக்குள்ளேயே இருந்த சோஷலிஸ்டுகள், சோவியத் யூனியன் பாணியைக் கடைப்பிடிக்கத் தொடங்கியதால், அதிலிருந்து வெளியேற்றப்பட்டு இந்திய கம்யூனிஸ்டுகளாக உருவாகினர்.

அந்த இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில் ஏற்பட்ட பிளவினால் 'மார்க்சிஸ்டு கட்சி' தோன்றிற்று. பிற தீவிரவாதிகளும் தோன்றினர்.

காங்கிரசில் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டினால், அதிலிருந்து வெளியேறி நேதாஜி கண்டதுதான் 'பார்வர்டு பிளாக்.'

காங்கிரஸ்காரர்களோடு தோன்றியதுதான் இந்து மகா சபை. அந்த இந்து மகா சபை முட்டையில் பொரித்த குஞ்சுகள்தான் 'ஆர். எஸ். எஸ்., 'ஜனசங்கம்.'

காங்கிரஸிலிருந்து வெளியேறியவர்கள்தான் 'ச. சோ., 'பி. சோ.'வில் இருப்பவர்கள்.

காங்கிரஸிலிருந்து வெளியேறிய பெரியார் கண்டதுதான் 'தி. க.', தி. க.விலிருந்து பிறந்ததுதான், 'தி.மு.க.', தி.மு.க.விலிருந்து பிறந்ததுதான். 'அ.இ.அ.தி.மு.க.'.

காங்கிரஸிலிருந்து பிறந்ததுதான் 'முஸ்லிம் லீக்'.

காங்கிரஸிலிருந்து பிரிந்ததுதான் 'சுதந்திரா கட்சி'.

இப்படிப் பல பிள்ளைகளை வளர்த்துத் தனிக் குடித்தனத்துக்கு அனுப்பும் பொறுப்பை, காங்கிரஸ் மேற்கொண்டிருக்கிறது.

அந்தக் காங்கிரஸில் மற்றும் ஒரு பிளவு என்றால் அதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது!

ஆட்சிப் பொறுப்பு இந்திராவின் கையில். அவரை ஆட்டிப் படைக்கும் பொறுப்பை மேற்கொள்ளப் பல முதிய தலைவர்கள் துடித்தார்கள்.

'டெல்லி மந்திரி சபையில் யாரைச் சேர்ப்பது, யாரை விலக்குவது என்பதைக்கூட தன்னைக் கலந்துதான் செய்ய வேண்டும்' என்று தலைவர் காமராஜர் விரும்பினார்.

இந்திரா மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ளப்படாதவர்களும், இந்திராவினால் அலட்சியப்படுத்தப்பட்டவர்களும் இந்தக் கருத்தில் ஒன்று சேர்ந்தார்கள்.

நிஜலிங்கப்பாவை காங்கிரஸ் தலைவராக்கும் முயற்சியில் தலைவர் காமராஜர் வெற்றி பெற்றுவிட்டார்.

பெங்களூர் மகாநாடு கூடியது.

சமீப காலங்களில் காங்கிரஸ் பிளவு வெடிக்க வேண்டும் என்றால், ஜனாதிபதி பதவி காலியாக வேண்டும் என்றாகிவிட்டதல்லவா!

அதன்படி ஜாகிர் ஹுசைன் காலி செய்த ஜனாதிபதி பதவிக்கு யாரை நியமிப்பதென் பதில் பெங்களூரில் சர்ச்சை எழுந்தது. தங்களுக்கு வேண்டியவரை நியமித்துவிட்டால் இந்திராவின் குடுமி, தங்கள் கைக்கு வந்துவிடும் என்று மூத்த தலைவர்கள் நம்பினார்கள்.

இந்திராவை நான்கு பக்கமும் நெருக்கி நீலம் சஞ்சீவ ரெட்டியை முன்மொழிய வைத்து விட்டார்கள்.

இந்திரா விடுவாரா? வி. வி. கிரியை சுயேச்சையாக நிற்கும்படி


✖ இந்திரா

செய்து விட்டார்! வலிமை மிக்க ஆதரவு இந்திராவுக்கு இருந்ததால், கட்சி வேட்பாளர் சஞ்சீவ ரெட்டி தோல்வியுற்று, சுயேச்சை வேட்பாளர் வி.வி. கிரி வெற்றி பெற்றார்.

கட்சி வேட்பாளரைத் தோற்கடிப்பதா என்று மூத்த தலைவர்கள் கொதித்தார்கள்.

கட்சி வேட்பாளர் ஜெயித்திருந்தால் தனது நிலை மோசமாகி யிருக்கும் என்பது இந்திராவுக்கல்லவா தெரியும்!

கட்சி வேட்பாளரைத் தோற்கடிப்பது என்பது என்ன காங்கிரசுக்குப் புதுச் செய்தியா? அன்று முதல் இன்றுவரை காங்கிரஸ்காரன் வேலையே அதுதானே!

பெங்களூர் மகாநாட்டுக்குப் பிறகு, மொரார்ஜி தேசாயிடமிருந்த நிதி இலாகாவை இந்திரா பறித்துக் கொண்டது, இந்திராவை மூத்த தலைவர்கள் நெருக்கியது ஆகியவற்றை விவரிக்கப் போனால், இது கண்ணதாசன் சுயசரிதமாக இல்லாமல், காங்கிரஸ் சரிதமாகிவிடும்.

எப்படியோ பிளவு ஏற்பட்டு, யார் எந்தப் பக்கம் இருக்கிறார்கள் என்று அடையாளம் கண்டுகொள்ள வேண்டிய நேரம் வந்து விட்டது.

இந்தப் பிளவை அவன் மௌனமாகக் கூர்ந்து கவனித்தான்.

சுய விருப்பத்துடனோ, மூத்த தலைவர்களைத் திணறடிக்கக் கருதியோ, பாங்குகள் தேசிய உடைமை போன்ற தீவிரத் திட்டங்களை இந்திரா அறிவித்திருந்தார்.

'எந்தக் காரணம் கொண்டு இது நிகழ்ந்தாலும், சோஷலிஸமல்லவா நிறைவேறுகிறது! இந்திரா புலி வாலைப் பிடித்திருக்கிறார். இனி அதை அவர் விட முடியாது. அவரை எதிர்க்கும் வேகத்தில் மூத்த தலைவர்கள் முதலாளித்துவத்தின் பக்கம் சாய நேரிடும்' என்று உறுதியாக நம்பினான் அவன்.

அதனால் காங்கிரஸ் பொதுக் கூட்டங்களுக்குப் போகாமல், ஒரு மாத காலம் மவுனமாக இருந்தான்.

அவனது மவுனத்தைக் கண்டு கலக்கமுற்ற தலைவர் காமராஜர் அவர்கள், முதலில் திருச்சி டி. எஸ். அருணாசலத்தை அவனிடம் அனுப்பினார். "தலைவரை வந்து ஒரு முறை பார்த்துவிடுங்கள்" என்று டி.எஸ். ஏ. கேட்டுக்கொண்டார். "பிறகு வருகிறேன்" என்று மறுப்பி அனுப்பி விட்டான்.

தனது 'கண்ணதாசன்' பத்திரிகையில், 'செவத்தம்மா' என்ற தலைப்பில் இந்திராவைப் பற்றி ஒரு கவிதை எழுதினான்.

நண்பர்கள் ப. நெடுமாறன், ஆர். எஸ். பாண்டியன், எம். பி. சுப்பிரமணியம்போன்றவர்கள் அதிலே மிகவும் வருத்தமுற்றார்கள்.

அதன் பிறகு தலைவர் காமராஜர் அவர்கள் திரு ஈ. வெ. கி. சம்பத்தை அனுப்பி வைத்தார். சம்பத்தோடு திரு எம். பி. சுப்பிரமணியமும் வந்ததாக ஞாபகம்.

'சரி, இவ்வளவு வற்புறுத்தியும் நாம் போகாமல் இருப்பது மரியாதை இல்லை' என்று அவன் முடிவு கட்டினான்.

அவர்களோடு சென்று தலைவரைப் பார்த்தான்.

அவர் ஒரு மணி நேரம் அவனிடம் பேசினார். "நம்முடைய ஊரில் கட்சியை ஒழுங்காக வைத்துக் கொண்டால், எல்லோரும் பயப்படுவார்கள்." என்றார். எந்தச் சமாதானமும் அவனை மாற்றவில்லை.

அவரும் அலுத்துப் போனார். "சரி, நீ யோசி. பிறகு பார்க்கலாம்" என்று எழுந்து விட்டார்.

அன்று இரவு சுமார் பத்துப் பதினைந்து காங்கிரஸ் பிரமுகர்கள் அவனிடம் வந்து பேசினார்கள்.

அவன் முடிந்த முடிவாக இந்திராவையே ஆதரிக்கப் போவதாகக் கூறி விட்டான். அப்போதும் உள்ளூற அவனுக்கொரு பயம் இருந்தது.

"என்னதான் நாம் தத்துவ விளக்கம் சொன்னாலும், தொண்டர்கள் காமராஜரை விட்டு வரமாட்டார்கள்" என்பதே அது.

அப்போது மதுரையில் இந்த தஞ்சை ராமமூர்த்தியையும் மற்றும் சிலரையும் டெலிபோன் மூலம் அவன் அழைத்தான். ராமமூர்த்தி மட்டுமே வந்தார்.

தஞ்சை ராமமூர்த்தி, கோவை எஸ். ஆர். பாலு, ஜெகவீர பாண்டியன் ஆகியோரை மட்டும் அவன் அழைத்துக் கொண்டான்.

இந்திராவின் கோரிக்கைக் கூட்டத்தை ஆதரித்துக் கையெழுத்துப் போட்ட அ.இ.கா. க. உறுப்பினர்களில் அவனும் ஒருவன்.

'ஹரி ஓம்' என்று தமிழ் நாட்டில் இந்திராவுக்கு ஆதரவு அளித்த முதல் பேச்சாளனும் அவனே!

காங்கிரஸ் பிளவு முற்றியது.

மூத்த தலைவர்கள் பாம்பெனச் சீறினர்.

காங்கிரஸில் நாலணா பதவி உட்பட அனைத்திலிருந்தும் . இந்திரா தூக்கி எறியப் பட்டார்.

பிளவு வெடித்தே விட்டது.

தன்னைச் சுற்றிலும் அவன் திரும்பிப் பார்த்தான். தன்னோடு மிகச் சிலர்தான் வந்திருக்கிறார்கள் என்பது அவனுக்குப் புரிந்தது.

'நியாயங்கள் காலதாமதமாகவே வெளிப்படும்' என்றபடி தான் மேற்கொண்ட நிலையிலேயே அவன் உறுதியாக நின்றான்.

(வளரும்)

"ஆபீசில் கிளார்க்வேலை போட்டுத்தரேன் என்று சொல்லி என்னை இங்கே கூட்டிவந்து மண் சுமக்க வைக்கிறீர்களே இது நியாயமா சார்!"

"கட்டிடவேலை முடியட்டும். ஆபீஸில் வேலை போட்டுத்தருகிறேன்."





## கல்கி

**சந்தா விவரம்**

★

மானேஜர்
கல்கி
கிண்டி, சென்னை - 600 032

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 60 | ரூ. 30 |
| இலங்கை | ரூ. 70 | ரூ. 35 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 110 | ரூ. 55 |

# ஆற்று வெள்ளங்கள்

ஜே.எஸ். ராகவன்

[முதல் இரவு அறை. கதவைத் தாளிட்டுவிட்டுக் கட்டில் மேல் உட்காருகிருன் ராமன். வெளியே இருந்து நடுங்கும் குரலில் ஒரு வயதான மாது பாடும் சிருங்காரப் பாடலின் சில அடிகள் காதில் விழுகின்றன. மல்லிகைப் பூ ஒன்றைக் கையில் எடுத்து முகர்ந்து பார்க்கிருன். கொள்ளை வாசனை. புது மனைவி வித்யா நாகக்காகச் சாயம் பூசிய நகங்களைப் பார்த்துக் கொண்டு இருக்கிருன்.] .

ராமன் (திடீரென்று): யாரு பாட்டுப் பாடறது?

வித்யா (களுக்கென்று சிரித்து): என் சித்தி.

ரா: இந்த மாதிரிப் பழைய பாட்டெல்லாம் தலைகீழா மனப்பாடம் பண்ணியிருக்கா போலிருக்கே?

வி: சித்திக்கு எல்லாப் பாட்டும் தெரியும். நலங்கு, வாலி, பஜனை இந்த மாதிரி!... ஆனு சித்திக்கு ஆஸ்த்மா..குரல் நடுங்கும், அப்பப்ப மூச்சு வாங்கும்.

ரா: அதைச் சரி பண்ணிடலாம். நான் தான் உங்க குடும்பத்துக்கு ஒரு டாக்டர் வந்துட்டேனே!

வி: ஆமாம்! நீங்க டாக்டர் இல்லே! மறந்தே போயிட்டேன். குட்சவினிங் டாக்டர்!

ரா:(கேலிக் குரலுடன்): எஸ்! இப்படி வந்து உட்காருங்கம்மா! உடம்பை என்ன செய்யறது? 'குப்'புனு வியர்க்கிறதா? கை, காலெல்லாம் நடுங்குகிறதா? இமைகள் துடிக்கிறதா? மார்பு 'படபட'ன்னு அடிச்சுக்கிறதா? ஹும்... எங்கே, நாக்கை நீட்டுங்க!

வி. (சிரித்து): பொல்லாதவர்! ஆமாம்! உங்களைக் கேக்கணும்னு நினைச்சேன். சாஸ்திரிகள் கையைப் பிடிச்சுக்கோ'ன்னு என் 'ரிஸ்ட்டைப்' பிடிச்சண்டேளே, பழக்க தோஷமா?

ரா: இதைவிட உனக்கு என்ன ப்ரூஃப் வேணும்? எந்த ஒரு பெண்ணையும் நான் 'ரிஸ்டைப் பிடிச்சுப் பார்த்துப் பழக்கமே தவிர, கையைப் பிடித்துப் பார்த்தது இல்லே!

வி.(பெருமையுடன்): நான் கொடுத்து வைத்தவள். (கோணல் பார்வையுடன்) நாடி சரியாகத்தானே இருந்தது? .

ரா: நாடியும், நம் ஜோடியும் சரியாகத்தான் இருக்கு. கிட்டே வாயேன்.

வி: கொஞ்சம் எழுந்து நில்லுங்கோ நமஸ்காரம் பண்றேன்.

ரா: சித்தி 'கோச்சிங்கா'?

[வித்யா வெட்கத்துடன், காஞ்சிபுரம் சரசரக்க



நமஸ்காரம் செய்ய, மென்மையாக, ஒரு பூமாலையைத் தூக்குவது போல், செழுமையான அவள் கைகளைப் பற்றித் தூக்கி, அருகில் உட்கார வைக்கிறான்.]

ரா: சரி! மற்ற கோச்சிங்கெல்லாம்? ஃப்பிரெண்ட்ஸா?

வி: மௌனம்.

ரா: மாரேஜ் மானுவல், ஹாவ்லாக், — எல்லிஸ் எல்லாம் படிச்சிருக்கியா?

வி: (மௌனம்.)

ரா: இதோ பார், டாக்டரிடம் எதையும் மறைக்கக் கூடாது தெரியுமா? எதைய்யும்!

வி: சீ... பேச்சைப் பாரு... கவனிச்சேளா? அதோ டேபிள்ளே எல்லாப் பழமும் இருக்கு. ஆனால் ஆப்பிள்மாத்திரம் இல்லே.

ரா: உங்களுக்குப் பயம் இல்லையா? ''தினம் தினம் ஒவ்வொரு ஆப்பிள் சாப்பிடச் சாப்பிட, டாக்டர் மாப்பிள்ளை தள்ளித் தள்ளிப் போய்டுவார்னு''?

வி: 'பழ' மொழியிலும் எக்ஸ்பர்ட் போலிருக்கு!



ரா: ஆமாம். கேள்விப்பட்டேன். உன்னை ஆயில் மில் ஓனர் ஒருத்தர் தன் பையனுக்காகக் கேட்டாராம். ஆனால் உங்க அப்பா பிடிவாதமாக எனக்குத்தான் கொடுப்பேன்னு சொல்லிட்டாராம். நல்லவேளை உங்க அப்பாவுக்கு ஒரு பழமொழி தெரியாது போலிருக்கு.

வி: எது?

ரா: 'வைத்தியனுக்குக் கொடுப்பதை விட, வாணியனுக்குக் கொடு' (இருவரும் சிரிக்கிறார்கள்.)

ரா. (மேஜையையும், வித்யாவையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு): பட்சணம் ஏகப்பட்டது இருக்கு இல்லையா?

வி: ஆமாம்! அவசரமில்லே... மெல்லச் சாப்பிடலாம்.

ரா: எப்படி? தினம் மூணு வேளையாகவா? கார்த்தாலே... மத்யானம்... ராத்திரி.

வி. (நாணத்துடன்): பொல்லாத டாக்டர் நீங்க.

ரா: அதெல்லாம் இருக்கட்டும். உன்கிட்டே சீரியஸா சில விஷயங்கள் பேசணும்.

வி: எஸ், டாக்டர்.

ரா: இன்னிக்கு நீ எனக்குப் போட்ட மாலை என் முதல் மாலை இல்லே. இரண்டாவது மாலைதான் — தெரியுமா உனக்கு?

வி. (பதற்றத்துடன்): என்ன சொல்றேள் நீங்க?

ரா: பதறாதே, வித்யா. ஆற அமர கவனமாகக் கேள். என் கழுத்தில் ஏற்கனவே ஒரு மாலை விழுந்திருக்கு.

வி. (கண்ணீருடன்): இப்படி சினிமா பாணியிலே என்னமோ சொல்றேளே? புரியல்லையே?

ரா: நான் சொல்றது 'ஸ்டெதஸ்கோப்' மாலையை.

வி. (பெருமூச்சு விட்டு): அப்பா, ஒரு நிமிஷத்திலே பயந்தே போய்விட்டேன்.

ரா: என்னை நீ சரியாப் புரிஞ்சுக்கணும். என் தொழில் மருத்துவம். தொழில்னு சொல்றது கூடத் தப்பு. அதை ஒரு புனித காரியமாக நினைக்கிறவன். 'ஹிப்போகிரேடிக்' சத்தியப் பிரமாணம் என்றால் உனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். அதை ஒழுங்காக மதித்துச் செயல்படணும்கிறதுதான் என் லட்சியம். நடு ராத்திரியில் கூட என்னை யாராவது கூப்பிட்டால் உடனே நான் கிளம்பிடுவேன். அதனாலே எனக்கு இந்த ஊர்லே நல்ல பெயர்.

வி. உங்களுக்கு நான் மனைவிங்கிறதிலே எனக்கு ரொம்பப்பெருமையா இருக்கு.

ரா: அவசரப்படாதே. நாமரெண்டு பேரும் சேர்ந்து இருக்கும் சில இரவுகளில்... அல்லது சேர்ந்து இருக்கவேண்டும் என்று விரும்புகிற சில இரவுகளில்... எதிர்பாராமல் சில 'கால்கள்' வந்தால் நான் என் 'ஸ்டெத்' மாலைக்குத்தான் முக்கியத்துவம் கொடுப்பேன், இன்னிக்குப் போட்டுக் கொண்ட மாலைக்கு அடுத்த இடம் தான். உனக்கு அதில் ஆட்சேபம் உண்டா?

வி. (உணர்ச்சியுடன்): என்ன அப்படிக் கேட்டு விட்டேள்? போகப் போகப்

பாருங்கோ.... உங்களுடைய லட்சிய மனைவியாக இருக்கிறேனா இல்லையான்னு... ஒரு பழமொழி சொல்லட்டுமா?

ரா: வெய்ட்! என்ன சொல்லப் போறேன்னு தெரியும். 'நின்று நீரை ஆற்று வெள்ளமா கொண்டு போகப் போகிறது' தானே?

வி: கரெக்ட். என் மனசைச் சரியாப் புரிஞ்சிண்டு இருக்கேள்.

ரா: சீரியஸ் பேச்செல்லாம் போறும் இப்போ ஆற்று வெள்ளம் ஒண்ணும் வராது. முக்கிய விஷயத்துக்கு வருவோம்.... பாரேன். இந்த ரூம்லே லைட் ஸ்விட்சை எங்கேயோ மறைச்சு வைச்சிருக்கான்... மாபாவி!... ஆ...ஆ... அதோ!...

[படுக்கையி லிருந்து விருட்டென்று இறங்கி லைட்டை அணைக்கப் போகும் போது பட்பட்டென்று கதவு மெள்ளத் தட்டப்படும் ஓசை கேட்கிறது. ராமனும் வித்யாவும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொள்கின்றனர். ராமன் கதவைத் திறக்கிறான். வெளியே அவன் அக்கா நிற்கிறாள்.]

அக்கா: சாரிடா... ராமா... இப்படி எக்கச்சக்கமா உன்னை டிஸ்டர்ப் பண்ணும்படியா ஆச்சு.

ரா: ஏன்? என்ன விஷயம்?

அ: (பெரியம்மாவுக்குத் திடீர்னு பேச்சே வரலேடா. உடம்பெல்லாம் வேர்த்துக் கொட்டறது. மாரெல்லாம் வலி, நெஞ்சை அடைக்கிறதுங்கறா... வலதுகை காலை அசைக்க முடியலேன்னு சைகை காட்டறா...பத்து நிமிஷமா துடிக்கிறா... இந்த அர்த்த ராத்திரியிலே வேறெந்த டாக்டரைக் கூப்பிடறது? (தயங்கி) வந்து பார்க்கறயா?

ரா: இதோ! நல்ல வேளை. மருந்துப்பையைச் சத்திரத்துக்குக் கொண்டு வந்திருக்கேன். நானு இட்டேயிருந்து வாங்கிண்டு வா. (வெளியே வருகிறான்)

அ. (குரலைத் தாழ்த்தி): டேய்! 'அவ' இட்டே சொல்லிட்டு வாடா. பாவம். எனக்கு என்னவோ போல இருக்கு. இப்படி உங்களை 'டிஸ்டர்ப்' செய்யறது ரொம்பப் பாவம்டா.

ரா: அதனாலென்ன? நீ போ. நான் உடனே வரேன். (உள்ளே நுழைந்து) வித்யா, அக்கா சொல்றதைப் பார்த்தா பெரியம்மாவுக்கு 'ஸ்ட்ரோக்'னு நினைக்கிறேன். உடனே ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போய் ட்ரீட் பண்ணணும்.... பார்த்தியா... பயமுறுத்தினேனே... ஆற்று வெள்ளம். முதல் ராத்திரியிலேயே வந்துடுத்து. இதோ போயிட்டு வந்துடறேன். என்ன? நான் சொன்னது, நீ சொன்னது எல்லாம் ஞாபகம் இருக்கா? ''லட்சியமனைவி....பெருமைப்படுகிறேன், எக்ஸெட்ரா.''

[வித்யா தலையை ஆட்ட முயற்சி செய்கிறாள். முடியவில்லை. திடீரென்று அவள் கண்களிலிருந்து 'திபுதிபு' என்று கண்ணீர் சுரக்கிறது. இரண்டுகைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு மிஸஸ் ராமனாகத் தன் முதல் அழுகையை ஆரம்பிக்கிறாள்!]

---

அருள்வாக்கு

## ஈசுவர நிவேதனம்

நைவேத்தியம் செய்தால் ஸ்வாமி எங்கே சாப்பிடுகிறார் என்று சிலர் கேலியாகக் கேட்கிறார்கள். நிவேதனம் என்றால் ஸ்வாமியைச் சாப்பிடச் செய்வது என்று அர்த்தமே இல்லை. அவருக்குச் சாப்பிட்டு ஒன்றும் ஆக வேண்டாம். நம் நினைவைச் சுத்தமாக்கிக்கொள்ளத்தான் பூஜை முழுவதுமே தவிர அவருக்கு இதனால் ஆவது ஏதுமில்லை. 'நிவேதயாமி' என்றால் 'அறிவிக்கிறேன்' என்றுதான் அர்த்தமே தவிர 'உண்பிக்கிறேன்' என்று அர்த்தமல்ல. 'அப்பனே! இந்த வேளைக்கு உன் கருணையில் நீ இந்த அன்னத்தைக் கொடுத்திருக்கிறாய்.' என்று அவனுக்குத் தெரிவித்து விட்டு அவனுடைய நினைவோடு உண்ண வேண்டும். அவன் அருள் இல்லாவிட்டால் இந்த அரிசி எப்படி விளையும்? ஸயன்ஸ் நிபுணர் அரிசி வகைகளை ஆராய்ந்து பெரிய பெரிய புத்தகங்கள் எழுதலாம். ஆனால் அவரால் ஒரு மணி அரிசியைச் செய்ய முடியுமா? செயற்கை அரிசி (Synthetic Rice) என்று ஒன்றைச் செய்ய முடிந்தால் கூட இதற்கு மூலமான கெமிகல் ஏற்கனவே பகவத் சிருஷ்டியில் இருந்துதானே ஆக வேண்டும்? எனவே மனிதன் செய்ததாகத் தோன்றும் எல்லாமும் கூட முடிவிலே ஈசுவரன் சிருஷ்டித்ததுதான். பரமேசுவரனால் கொடுக்கப்பட்டதை அவனுக்குக் காட்டாமலே நாம் அனுபவித்தால் திருடர்களாவோம்.



எங்கும் இருக்கும் அவன், நாம் இருக்கச் சொல்லும் இடத்தில் நாம் ரசிக்கும்படி வந்து நிற்பான். கல், மண், செம்பு முதலிய எந்தப் பிம்பத்தில் வைத்துக் கூப்பிட்டாலும் வருவான். அப்படிப்பட்ட யோக்கியதையும் கருணையும் அவனுக்கு நிச்சயமாக இருக்கிறது. இல்லையென்றால் அப்படிப்பட்ட ஸ்வாமி நமக்கு வேண்டவே வேண்டாம்.

அவனைப் பூஜை என்று வைத்து ஒவ்வொரு குடும்பத்திலும் கூப்பிட்டு, அவனால் கொடுக்கப்பட்டதை உபயோகிக்கிறோம் என்று அவனிடம் அறிவிக்க வேண்டும். இப்படிச் செய்து வந்தால் ஈசுவரனுக்கு நிவேதனமாக அர்ப்பிக்கத் தக்கதைத் தவிர வேறெதையும் நாம் உபயோகிக்கக் கூடாது என்ற பக்குவம் நாளடைவில் உண்டாகும். நல்லவர்களாவோம்!

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

# மேதைகளை உருவாக்கிய மேதை



குப்புசாமி சாஸ்திரி

ஸம்ஸ்கிருதக் கல்விக்காக மிகவும் பாடுபட்டவர்களின் முன்னணியில் நின்று, வாழ்க்கையில் பெரும் பகுதியை மாணவர்களுக்கே செலவழித்த பெருந்தகைகளில் மகாமகோ பாத்தியாய, தரிசன கலாநிதி எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரியாரை என்றென்றும் நாம் நினைவில் போற்ற வேண்டும். 1880 ஆம் ஆண்டில் தோன்றி 25 வயது நிரம்புவதற்குள் பல சாஸ்திரங்களைப் பண்டை முறையில் இரண்டு சந்நியாஸிகளிடமே கசடறக் கற்று, 1906ல் சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியின் தலைமை ஆசிரியராகப் பணி செய்து, பிற்பாடு 1914 முதல் மாநிலக் கல்லூரியில் ஸம்ஸ்கிருத தலைமை ஆசிரியர் பதவியிலும் இருந்து செயலாற்றியவர். 1935ல் ஓய்வு பெற்ற பின்னும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மகாஜனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் துணை வேந்தராயிருக்கையில் கௌரவ ஆசிரியராக மூன்று ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றினார். பிறகு 1943ல் தமது கிராமமான கணபதி அக்கிரகாரத்தில் உடல் நலமின்றிச் சிறிது காலம் கடத்தி உயிர் நீத்தார்.

ஸம்ஸ்கிருதத்துக்காக உழைத்து மதிப்புக்குரிய விதம் பலருடன் சேர்ந்து ஸம்ஸ்கிருதக் கல்வியின் பொருட்டு அநேக நற்காரியங்களையும் நிறைவேற்றினார். ஸம்ஸ்கிருத அகாடமி 1927ல் ஆரம்பமாகியது, அவருடைய தூண்டுதலால்தான்.

Oriental Research Journal என்ற சஞ்சிகையை வருஷம் தோறும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் நிரம்பியதாய் வெளியிட்டு வரும் அவரே. மேல் நாடுகளிலிருந்தும் ஜப்பான் முதலிய கீழ் தேசங்களிலிருந்தும் அந்தப் பத்திரிகையை ஆதரித்தவர்கள், அநேக ஸம்ஸ்கிருத வல்லுனர்கள்.

உயர்ந்த மாணாக்கர்கள் பலரை உருவாக்கினார். டாக்டர் வெ. ராகவன், டாக்டர் சிவராம மூர்த்தி போன்ற உலக மறிந்த மேதைகளை உருவாக்கி ஊக்கியவர் அவரே.

இன்று அவர் ஞாபகச் சின்னமாய் விளங்குவது குப்புஸ்வாமி சாஸ்திரி ஆராய்ச்சிக் கழகம். இதனை மகாஜனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார், டாக்டர் ராதா கிருஷ்ணன், டி. ஆர். வெங்கடராம சாஸ்திரிகள் கெ. பாலசுப்பிரமணிய ஐயர், கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் முதலிய பல பிரமுகர்கள் கூடி ஆலோசித்து உண்டாக்கினார்கள். ஆனால் இதனை இமையினுள் வைத்துப் பாதுகாத்து உருவாக்கியவர் டாக்டர் வெ. ராகவன்.

ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்திரியாரின் பிறந்த நாள் நூற்றாண்டினைச் சிறப்பாகக் கொண்டாடி, அவருடைய ஞாபகச் சின்னமான ஆராய்ச்சிக் கழகத்தை இன்னும் ஸ்திரமாய் அமையச் செய்ய உத்தேசித்துப் பணிகள் நடக்கின்றன.

வரும் ஜூன் 19, 20, 21 தேதிகளில் சென்னை மயிலையில் உள்ள ஸம்ஸ்கிருத கல்லூரியின் விரிந்த வெளியில் பெரும் பந்தல் போட்டு, விமரிசையாய் விழா நடைபெறும். அச்சமயம் பல ஆராய்ச்சி விற்பன்னர்கள் சிறுசிறு குழுக்களாய் அமைந்து தங்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் சமர்ப்பித்து விவாதிப்பார்கள். மாலை வேளைகளில் வந்திருக்கும் பண்டிதர்களுக்கும், பேராசிரியர்களுக்கும் கண்ணுக்கும் செவிக்கும் விருந்தாகப் பிரபல வித்வான்களின் சங்கீதம், அரிய ஸம்ஸ்கிருத நாடகம், நாட்டியம் முதலியவை நடக்கும். ஜூன் 20ம் தேதி முழுவதும் சென்னை ஸம்ஸ்கிருதக் கல்லூரியின் "பவழ விழா" (75 ஆண்டுகள்) நிகழ்ச்சிகள் நடைபெறும். பண்டிதர்களின் 'பரிஷத்' ஒன்றும் 20ம் தேதி நடைபெறும்.

வரவேற்புக் குழுவில் அங்கம் வகிக்க விரும்புகிறவர்கள் காரியதரிசி, குப்புஸ்வாமி சாஸ்திரி ஆராய்ச்சிக் கழகம், 84, இராயப்பேட்டை, சென்னை-600014 என்ற விலாசத்துக்குத் தொடர்பு கொள்ளலாம்.

– கி. சந்திரசேகரன்

வெ. ராகவன்





# மரமேறிய சுதாகர்



○ ''அன்று வாங்கிவைத்த ஃபேன்.''

''நீங்கள் படவுலகுக்கு வருமுன் இருந்த வீடு எது?'' என்றேன் சுதாகரிடம்.

''வீடு இல்லே, சார்! ரூம்! ரூம்!'' எனத் திருத்தினார் அவர்.

''விஜயராகவாச்சாரி தெருவில் பதினேழாம் நம்பர் வீட்டின் மாடியில் ஓர் அறை. வாங்க சார், பார்க்கலாம்!''

போகும் வழியில் மேலும் பேசினார் சுதாகர்: ''அங்கு தங்காமலே அந்த அறைக்கு யாராவது வாடகை கொடுப்பார்களா? நான் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். ஏனெனில் அந்த அறை எனக்கு ராசியானது. மாதம் 150 ரூபாய் வாடகை அதற்கு. சும்மா ஏன் பூட்டிக் கிடக்க வேண்டும் என என் நண்பரை அங்கே தங்க வைத்திருக்கிறேன்.''

வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் சுதாகரின் நண்பர் ராம்குமார் வந்து வரவேற்று அழைத்துப் போனார். வாகினி ஸ்டுடியோவில் அப்போது பகல் உணவு இடைவேளை. ஷூட்டிங்கிற்கு நடுவில் சுதாகர் — ராம்குமார் மீட்டிங் நடைபெற்றது.

கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போன அதிர்ஷ்டசாலி ராம்குமார். பாரதிராஜா 'கிழக்கே போகும் ரயில்' படம் எடுக்க நினைத்தபோது கதாநாயகன் வேடத்துக்கு ஒரு புது முகத்தைத் தேடிக்கொண்டிருந்தார். இந்த அறையிலிருந்து இரண்டு பேர் போனார்கள். தேர்வு பெற்றவர் ஒருவர்தான். ஆம், சுதாகர் வெற்றி பெற்றார். ஆனால் இன்னும் ராம்குமார் முயன்று கொண்டிருக்கிறார். முயன்றால் முடியாதது ஏதுமில்லை என்ற பழமொழியை இவர் மறப்பதாக இல்லை.

''அன்று நான் வாங்கி வைத்த பல பொருள்கள் இன்னும் அப்படியே இருக்கின்றன. ஒரு எடுத்துக்காட்டு இந்த டேபிள் ஃபேன். வாங்கும்போது நன்றாகத்தான் இருந்தது. பின் கொஞ்சம் கொஞ்சமாகக் கறுத்து, தேய்ந்து உருக்குலைந்து இப்படியாகி விட்டது. நல்லவேளை இன்னும் இதற்கு ஹார்ட் அட்டாக் வரவில்லை!'' என்ற சுதாகர் அண்ணாந்து பார்த்தார்.

''இத பாருங்க சார்! மேலே கூரையில் பெரிய ஓட்டை!'' என்றார். அஸ்பெஸ்டாஸ் ஷீட் கூரை கொஞ்சம் உடைந்திருந்தது. காரணம் என்ன என்பது போல் சுதாகரை நான்



பார்க்க, அவர் தொடர்ந்தார். ''ஒரு நாள் தேங்காய் சாப்பிட விரும்பியதன் விளைவு அது! தோட்டத்தில் தென்னை மரங்களும் மாமரங்களும் உள்ளன. ஒரு நாள் பொழுது போகாத வேளையில் யாருக்கும் தெரியாமல் மரம் ஏறத் தீர்மானித்தேன். மாமரம் ஏறுவது சுலபம்தானே! அதனால் கஷ்டப்பட்டுத் தென்னை மரம் ஏறித் தேங்காயை வெட்டிக் கீழே போடும்போது கை நழுவித் தேங்காய் நேராக அறையின் மேல் விழுந்து ஷீட்டை உடைத்தது. நல்ல வேளை இப்படி பல சமயம் முற்றின தேங்காய்கள், மட்





''அறையை நாங்களே பெருக்கவேண்டியதுதான்!''

''எங்கள் இருவரில் என்னைத் தேர்ந்தெடுத்தார் பாரதிராஜா''

டைகள் விழுவது சகஜமாதலால் யாரும் சந்தேகப்படவில்லை. நான் தப்பித்தேன்!

''இதிலே இன்னொரு விநோத அனுபவம்! 'பட்ட காலிலே படும்' என்பார்கள். இல்லையா? இங்கே பட்ட கூரையிலேயே பட்டது! தேங்காய் விழுந்த இடத்திலேயே இன்னொரு முற்றின தேங்காய் விழுந்தது! இரவு நேரம். நானும் என் நண்பர்களும் தூங்கிக் கொண்டிருந்தோம். நான் கூரை உடைந்த இடத்துக்குக் கீழேதான் படுத்திருந்தேன். நல்ல வேளை நடு ராத்திரியில் எழுந்து மறுபடி படுத்தபோது தூக்கக் கலக்கத்தில் இடம் மாறிப் படுத்திருக்கிறேன். எப்படி மாறினேன் என்று இப்பொழுதும் எனக்குப் புரியவில்லை. தெய்வச் செயல்தான், மாறிப் படுத்துச் சற்று நேரத்துக்கெல்லாம் கண் செருகிக்கொண்டு போன சமயத்தில் டமால் என்று ஒரு சத்தம்! உடைந்த அந்தத் துவாரத்தின் வழியே ஒரு தேங்காய் அறைக்குள் விழுந்தது ! அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தேன். என் தலை சிதர் தேங்காய் ஆகாமல் காப்பாற்றிய ஆண்டவனைப் பிரார்த்தித்தேன்..

''இந்த அறையில் இருந்தபொழுது எப்பொழுதாவது சினிமாவுக்குப் போகத் தோன்றும். நண்பர்கள் கையில் உள்ள காசுகளை ஒன்றாகப் போட்டு எண்ணிப் பார்ப்போம். டிக்கட் செலவுக்கு ஆனால் சரி, போவோம். இல்லையென்றால்...?

''நானும் எனது நண்பர்களும் வாசலில் வந்து நின்று கொண்டு தெருவை வேடிக்கை பார்க்க ஆரம்பித்து விடுவோம். வாழ்க்கை சினிமா! பிளியான் தெரு. எண்ணங்களும் வண்ணங்களும், இளமையும், இனிமையும் நிறைந்திருந்ததால் நேரம் போவதே தெரியாது!

''எங்களுடைய பொருளாதார நிலைமை வேலைக்காரி வைத்துக் கொள்ள இடமளிக்கவில்லை. நாங்களே அறையைப் பெருக்கிச் சுத்தம் செய்வோம்....''

சுதாகர் பழைய நினைவுகளை அடுக்கிப் பேசுகிற சுவாரஸ்யத்தில் இருந்தார். ஆனால் இதற்குள் படத் தயாரிப்பாளரின் கார் டிரைவர் வந்து, 'நேரமாகி விட்டது' என்று ஞாபகப்படுத்தவே, ''ஸெட்டில் யாரையும் காக்க வைக்கக் கூடாது'' என்று கிளம்பி விட்டார் சுதாகர்.

-சலன், படங்கள்: ஏ.வி. பாஸ்கர்

# Kalki Shopping Page

திருமண பட்டு ஜவுளிகள்
வாங்க "கைராசி"யான ஸ்தாபனம்



## கருணை
## ஜவுளி மாளிகை

ராஜ வீதி • கோயமுத்தூர்-1
போன்: கடை:22881 • வீடு: 22624.

---

ஆரோக்கிய உடலையும்,
ஆனந்த வாழ்வையும் தரும்

## ஆழ்நிலை தியானம்

(தபால்வழி போதனை முறை)

அன்றைய நாளில் வாழ்ந்தோர் - ஆயுள் குறை வற்றும் - ஆரோக்கிய நிலை நலம் பெற்றும் நீடு வாழ்ந்தனரே - அவர்கள் அனுசரித்த அரிய முறைகள். நூற்றாண்டுகளுக்கு மேல் வாழுதற்குரிய எளிய வழிமுறைகள், அதிசய சக்தி பெறும் மார்க்கங்கள் 'சூட்சம யாத்திரை', 'கூடுவிட்டு கூடுபாய்தல்', 'அகக்காணல்', ஒருவரை பார்த்த மாத்திரத்தில் அவருக்குள்ள குறை, நிறை அறிதல் - நினைத்ததை சாதிக்கும் நிறைவேற்றல் பெறுதல் - ஸ்பீட்ச நிலையை அடைதல் - அதிர்ஷ்ட நிலை பெறல் - ஆகியவை போன்ற அதிசய சக்திகள் பெறுமுறைகள் — சீரான வழிகளில் சிறப்பான தமிழில் புகட்டிடப்படுகின்றது. எல்லாதாருக்கும் - இனிது தரும் நலக்குவியல். இல்லறமேற்றோர்க்கும் நலங்கூறும் வழிமுறைகள். பயின்றிடுவீர்; பலன் பெறுவீர். சேரும்முறை செலுத்தும் கட்டணம் அறிய 50 நயா பைசா தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட கவரிணைத்து 10-7-1981-க்குள் தேதிக்குள் மனுச் செய்து கொள்க.

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி**
ராஜயோக பயிற்சியாளர்
பிளாட் நெ. 204, கதவு எண் 5,
அண்ணா நகர், (தபால் நிலையம் அருகில்)
மதுரை – 625020

---

# Solidaire
# சாலிடெர்
# ஸூப்பர் டீலர்
# Solidaire
# சாலிடெர்
# ஸூப்பர் டீலர்






## ஏஜென்ஸீஸ் &
## ஏஜென்ஸீஸ்

16, தெற்கு உஸ்மான் ரோடு தி. நகர்,
சென்னை 17, போன் : 440004, 440725

# அட்மிஷன்



பள்ளி ஆசிரியர் : பதினாறும் பெற்றுப் பெரு' வாழ்வு வாழ்க!

தம்பதி : பதினாறுக்கும் நீங்க அட்மிஷன் தாரதா இருந்தா நான் பதினாறும் பெற்றுக் கொள்ளத் தயார்!

''நம்ம வீட்டுக் குழந்தைங்க, பேரக் குழந்தைங்க,... உங்க அண்ணு, தம்பி, அக்கா, தங்கச்சி வீட்டுக் குழந்தைங்க, பேரக் குழந்தைங்க மொத்தம் நூறுக்கு மேலே இருக்கும்! அட்மிஷன், நன்கொடைன்னு அவதிப்படாம.. பேசாம நமக்குன்னு ஒரு ஸ்கூல் கட்டி வையுங்க!''





''அட்மிஷனுக்குச் செங்கல் சிமெண்ட் தவிர சேர், டேபிள் கூட தரலாம்!''

''அட்மிஷன்தானே!...கவலைப்படாதிங்க.நான் இங்கிலீஷ் மீடியம் ஸ்கூல் ஆரம்பிச்சிருக்கேன்! டொனேஷன் தவணை முறையில்! நான் வந்து வசூல் பண்ணிக்கறேன்!''






''எத்தனை மேஜை, நாற்காலி வேணும்?''

''உங்க பர்னிச்சர் கடையையே மேஜை நாற்காலியோட வாடகைக்கு விட்டா நான் இங்கேயே ஸ்கூல் ஆரம்பிச்சுடுவேன்!''

## 23. தன்மானப் பிரச்னை

"என்னது? நான் மாறு வேஷத்தில போகணுமா? எதுக்கு?" என்றான் வஸந்த் சற்று அதிர்ந்து.

"அந்த வியாபாரம் என்னன்னு கண்டு பிடிக்கறதுக்கு. நீதான் நல்லா வேஷம் போடுவியே. கேள்விப்பட்டிருக்கிறேனே."

"எப்ப பாஸ்? நான் சின்ன வயசில ஒரே ஒரு தடவை பள்ளிக்கூடத்தில பாரதியாரா வேஷம் போட்டுக்கிட்டு ஸ்டேஜ் பூரா தலைப்பாவை இழுத்துக்கிட்டு கப்பலோட்டிய தமிழனைக்கவுத்துட்டேன். அதுக்கப்புறம் ஜன்மத்துக்கும் வேஷம் போடறதில்லைன்னு எங்கம்மா கிட்ட எச்ச உமிழ்ந்து சத்தியம் பண்ணிக் கொடுத்திருக்கிறேன். என்ன வேஷம் போடணும்? ரெப்ரிஜிரேட்டராவா? அப்படி ஏதாவது இம்பாஸிபிளா சொல்லுவீங்களே!"

"நீ என்ன வேஷம் போட்டுக்கிறியோ கொஞ்சம் நம்பும்படியாப் போடு... அங்க போய்க் கொஞ்ச நேரம் அல்லது கொஞ்ச நாள் பஸ் ஸ்டாண்டில அலைஞ்சு அந்தப் பத்துக்கு நாப்பது பார்ட்டியை எப்படியாவது காண்ட்டாக்ட் பண்ணணும். என்ன?"

"என்ன வியாபாரம்னு தெரியாம பேந்தப் பேந்த விழிக்கிறதா?"

"கண்டு பிடிக்கிறேன் வஸந்த்."

"கண்டு பிடிக்காம தொடரும் போடறதில்லைன்னு வெச்சிருக்கீங்களா பாஸ்?"

"அந்தக் கட்டுரையை மறுபடி எப்படியாவது கொண்டு வந்துட்டாத் தெரிஞ்சு போயிரும். நீதான் ஏதோ கெமிஸ்ட்ரி பேராசிரியரைத் தெரியும்னு சொன்னியே."

"பேராசிரியை."

"இங்க கூட பெண்பாலா?"

"அவங்களுக்கு ஒரு முறை கிரிக்கெட் மாட்சில தர்மாஸ்பிளாஸ்க் நிறைய பால் வாங்கிட்டு வந்தேன். அப்பலேந்து பழக்கம். வயசு முப்பதுதான் ஆறது. எங்கிட்ட

# வஸந்த்! வஸந்த்!

சுஜாதா



ரொம்ப ஒரு இது. அக்கா தம்பி மாதிரி ஒரு அட்டாச்மெண்ட்....''

''விவரங்கள் வேண்டாம். சாயங்காலத்துக்குள்ள அந்தக் கட்டுரை எனக்கு...''

''வந்தாச்சு கவலையை விடுங்க. பாஸ், நான் கோவிந்தா சொம்பு ஒண்ணு எடுத்துக்கிட்டுத் திருப்பதில வேண்டுதலைன்னு மொட்டை அடிச்சுக்கிட்டுப் போகட்டுமா?''

''இல்லே வஸந்த். ஏதாவது நம்பும்படியாப் போ. எனக்கென்னமோ ஒரு சின்ன மீசை, கன்னத்தில கறுப்பு மச்சம் கொஞ்சம் விந்தி விந்தி நடை. இது போதும்னு தோணுது. அதுக்கு முன்னடி கட்டுரையைப் பார்.''

வஸந்த் செல்ல கணேஷ் தன் கேஸ் கட்டுகளைப் பார்க்க விழைந்து அவைகளைப் பிரித்தான். காவேரி பேப்பர் மில்ஸுக்கும் சென்ன கேசவனுக்கும் ஒரு சிக்கலான வழக்கு. பேப்பர்மில்லின் சார்பாக அவன் வழக்காட வேண்டும். பகாஸ் சப்ளை செய்து அதிலிருந்து நியூஸ் பிரிண்ட் உற்பத்திக்கும் புதிய முறைக்கு அந்த மில்லே விரிவுபடுத்தும் திட்டத்தில் கரும்பு பயிரிடுபவர்களின் கோ-ஆபரேட்டிவ் நிறுவனத்தின் சார்பில் சென்ன கேசவன் ஆலைச் சக்கையான பகாஸைத்தருவதாக வாக்களித்துவிட்டு இப்போது கையை விரித்து விட்டதால் காவேரிக்கு ஏற்பட்டநஷ்டம்.... கணேஷ் கொட்டாவி விட்டான். காவேரியின் இன்ஜினியர் பின்னணிச் செய்தியாக அவனிடம் காகிதம் செய்யும் பல முறைகளைப் பற்றிய ஒரு குண்டுப் புத்தகத்தை வேறு கொடுத்துப் போயிருந்தார். அதை அசுவாரஸ்யமாகப் புரட்டினான். மனம் உக்கல் கிராமத்திலேயே இருந்தது. ஒரு சங்கிலி, ஒரு தோடர், ஒரு கலை கிடைத்து விட்டால் போதும். பத்துக்கு முப்பது எப்போது? பத்துக்கு நாப்பதை விட சிலாக்கிய மானது?

The soda process uses caustic soda (sodium Hydroxide) The kraft or sulphate process results in a stronger fibre. Sodium monasulphate is one of the newer working methods

கணேஷ் விழித்துக் கொண்டு... சோடியம் ஹைட்ராக்ஸைட்! சோடியம் மனோ சல்ஃபைட்! எங்கே பார்த்திருக்கிறோம்? ஆம். அந்தத் துண்டை வஸந்த் பொறுக்கிக் கொண்டு வந்த துண்டை ஆராய்ச்சிசாலைக்கு அனுப்பிக் கிடைத்த ரிப்போர்ட்டில். கணேஷ் தொடர்ந்து படித்தான்.

The logs are sliced and the slices broken up into chips from $\frac{3}{4}$ to 1 inch size and pressure cooled in a steam heated digester

chip - சபாஷ் மரத்துண்டு!

To make paper dimensionally stable and for good finish china clay Titanium oxide

டைட்டானியம் ஆக்ஸைடு! இதையும் பார்த்த ஞாபகம். கணேஷுக்குச் சற்றுப் புரிய ஆரம்பித்தது. பேப்பர் தயாரிக்கிறார்கள். நல்ல தரமுள்ள பேப்பர்! அந்த



அருணா எண்டர்ப்ரைஸஸ்ஸின் பலதரப்பட்ட பிஸினஸ்களில் ஒன்றாக இருக்கலாம் அல்லது.... பேப்பர்! உக்கலின் பக்கலில் பேப்பர்! எதற்குத் தயாரிக்க வேண்டும்? ஏதாவது ரகசியப் பத்திரிகையா? சதி இலக்கியமா? கணேஷ் யோசித்தான். Sizing agents of which resin is the most Common render the paper resistant to penetration by water.

அட! இப்படி இருக்குமோ?

கணேஷுக்குள் மின் புயல் அடித்தாற் போல் எண்ணங்கள் பறந்தன. இப்படித்தான் இருக்க வேண்டும். அல்லது இப்படியா? எங்கே போய்த் தொலைந்தான் இந்த வஸந்த்? இந்தச் சமயத்தில் என் சந்தேகங்களைப் பகிர்ந்து கொள்ள இல்லாமல் போய் விட்டானே!... டெலிபோனை எடுத்தான். சுழற்றினான். மறு முனைக் கிர்ர்ர்ரிங்கிக்க, கணேஷ் ஒரு காகிதத்தில் ''காகிதத் தொழில்கள் என்ன என்ன?''.என்று எழுதிப் பார்த்தான்.

''ராஜேந்த்ரன், கணேஷ்! அந்தக் கேஸ்ல ஒரு ப்ரேக்!''

''என்ன கணேஷ்?''

''அவங்க காகிதம் சம்பந்தப்பட்ட ஏதோ செய்யறாங்க!''

''காகிதமா?''

# பாலைவனச்சோலை



● வகைக்கொன்றாய் பிரச்னையுடைய ஐந்து வித்தியாசமான இளைஞர்கள். சோகங்களை உள்ளடக்கித் தெருச் சங்கமத்தில் சந்தோஷமும், 'மு.'வில் தாக சாந்தியும் அடைபவர்கள். இவர்களின் வெறுமையைப் போக்கும் தென்றலாய் உள் நுழையும் இனிய சிநேகிதி கீதா. அதைத் தொடரும் புதுமையான சம்பவங்கள்.

கதையை வித்தியாசமாய்த் தேர்ந்தெடுத்தவர்கள் திரைக் கதை என்பது மாபெரும் விஷயம் என்பதை உணரத் தவறியதன் மோசமான விளைவு, கோவையில்லாமல் மெல்ல ஊர்ந்து நகரும் படம். யாருக்காயினும் கஷ்டம் என்று வந்த மாத்திரத்தில் அதைத் தீர்க்கவோ, அல்லது ஆறுதல் சொல்லவோ உடன் பிரசன்னமாகும் மாமருந்து கீதா. இதில் வரும் சம்பவங்களில் நடைமுறைசாத்தியத்தை நாம் தேடாவிடில், நலம்.

கீதாவுக்கும் மற்றவர்களுக்கும் இடையேயான நட்போ அல்லது உறவோ எத்தகையது என்பது சரிவரச் சொல்லப்படவில்லை. திடீரென்று சேகர் கீதாவைக் காதலிப்பதாய்ச் சொல்வது குழப்பமான காட்சியமைப்புக்களில் உச்சம்.



வைர முத்துவின் கவிதை வாணி ஜெயராமின் குரலில் நல்ல பாடலாகியிருக்கிறது. தேவையில்லாத இடங்களில் பின்னணி இசை சேர்த்து, காட்சியின் சீரியஸ்னஸைக் கெடுத்து எரிச்சல் ஊட்டும் சங்கர்கணேஷ்.

பிரசன்னகுமாரின் தத்துவ மழை வசனங்கள். இரண்டு பேர் சேர்ந்து செய்திருக்கும் அளவுக்குப் பிரமாதம் இல்லாத ஒளிப்பதிவு.

பெரும்பாலான இடங்களில் இதில் வரும் ஆண் பிள்ளைகளின் சரிவர வெளிப்படுத்தாத பாவங்களும், பெட்டைப் புலம்பலும் நமக்குக் கோபமூட்டுகின்றன.

தன்னைக் காதலித்த சேகரை, நண்பனின் தங்கையை மணக்குமாறு பணித்துவிட்டு நாம் நினைத்தவாறே சினிமா மரபின்படி கீதா இறக்கிறாள் (இதய நோயாம்!)

சுஹாசினியின் நடிப்பு சுஹானுபவம். கைலாஷும், சினிமாப் பித்து தியாகுவும் சந்திரசேகரும் சொல்லும்படி செய்திருக்கிறார்கள்.

டைட்டிலும், டைரக்டர்கள் பெயரும் நம்மை நிறைய எதிர்பார்க்க வைத்தது மட்டும் உண்மை. — ''சிந்து ஜீவா''

# தாமதமேன், தருணமே கண்டுகொள்வீர் தரத்தில் உயர்த்தியான காலமைன்.






# புதிய லக்மே காலமைன்

- உயர் வண்ணச் சாயல்கள்.
- உயர்த்தியான நறுமணம்.
- உயர்த்தியான பரவல் திறம்

மூவகைச் சரும நிறங்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றுதான்.

லகுவாக சருமத்தோடு இழைந்திடும் லக்மே காலமைன்

மென்மணம் கமழ்கிறது லக்மே காலமைன். உயர்த்தியிலும் உயர்த்தியானதே உகந்தது உமக்கு : லக்மே காலமைன்.

எழிலோடு மருந்திழையும் முழு நாள் முலாம்.

# Lakmé

''ஆமா. காகிதம் தயாரிக்கிறாங்க. அல்லது காகிதத் தயாரிப்போட சம்பந்தப்பட்ட ஏதோ செய்யறாங்க. பல்ப்பு செய்யறது. பீட்டிங் ஏதாவது....''

''கொஞ்சம் இருங்க. பறக்காதீங்க. எப்படி இந்த முடிவுக்கு வந்தீங்க?''

''அங்க இருந்த ஒரு ஆளோட வியாபாரம் பேசிட்டு இருக்கறப்போ அவன் கையில ஒரு பார்ஸல் மாதிரி ஏதோ ஒண்ணு வெச்சிருந்தான்னு சொன்னேனில்ல....''

''ஆமா.''

''அடுத்த தடவை வஸந்த் அவனைச் சந்திக்கப் போனபோது அந்தப் பார்ஸலிலிருந்தோ அல்லது அதோட சம்பந்தப்பட்ட ஏதோ ஒன்றிலிருந்தோ விழுந்த பொருள் ஒன்றைப் பொறுக்கிட்டு வந்து அதைக்கூட நான் உங்க கிட்ட போலீஸ் லாபில அனலைஸ் பண்ணி ரிப்போர்ட் தரும்படி கேட்டுக்கிட்டேனே ஞாபகம் இருக்கில்ல?''

''இருக்கு.''

''அந்த ரிப்போர்ட்டில கண்ட பொருட்கள் எல்லாம் பேப்பர் தயாரிக்கிறதில உபயோகப்படற ரசாயனப் பொருட்கள்!''

''அந்தத் துண்டு என்னதான்னு சொல்லலீங்க?''

சரியாத் தெரியலே. ஒருவேளை மரத் துண்டா இருக்கலாம். பேப்பர் தயாரிக்கற ரா மெட்டீரியல். சின்னச் சின்னத் துண்டுகளா மரத்தை வெட்டித்தான் பேப்பர் தயாரிப்பாங்க. அந்தத் துண்டுகளில் ஒண்ணு பேப்பர் தயாரிப்பதற்கு முன்னாடி கெமிக்கலா ட்ரீட் பண்ண துண்டா இருக்கலாம். அதுதான் தப்பித் தவறி அந்தப் பார்ஸலோட ஒட்டிக்கிட்டு வந்திருக்கணும்...''

''பேப்பர், பேப்பர்! இருங்க கணேஷ்! இந்தக் கேஸ் நான் நினைக்கிறதா இருந்தா பெரிய விஷயம். உடனே வரீங்களா? முதல்ல அந்த அருண் எண்டர்ப்ரைஸஸைப் பார்க்கலாம்.''

''அதுக்கு முன்னாடி வஸந்த் கிட்ட ஒரு கட்டுரை எடுத்துக்கிட்டு வரும்படி சொல்லியிருக்கேன். அது வந்ததும் இன்னும் கொஞ்சம் தெளிவாகும்னு நம்பறேன்....''

''சரி. ஏதாவது தெரிஞ்சாச் சொல்லுங்க. நாங்களும் இப்பவே தீவிரமா விசாரிக்கப் போறோம்!''

''ராஜேந்திரன்! ஏதாவது இண்டிகேஷன் தெரியுதா உங்களுக்கு?''

''ஆமாம் கணேஷ்! ஆமாம்! நீங்க இப்ப சொன்னதில இருந்து புடிச்சுக்கிட்டேன்.''



அவள் : ''முரட்டுக்காளை படத்துக்குப் போவோமானு கேட்டதுக்குப் பளார்னு கன்னத்தில் அறைஞ்சுட்டாராமே உன் புருஷன்...ஆள் ரொம்ப மோசமோ?''

இவள்: ''அப்படி ஒண்ணுமில்லே... பொதுவாக அவர் மனசு தங்கம்... எப்பவாவது சில சமயம்மட்டும் பித்தனே!''

-உ. ராஜாஜி

''என்ன?''

''இவ்வளவு தூரம் கண்டு பிடிச்சிருக்கீங்களே. இதையும் கண்டு பிடிங்களேன்! போலீசுக்குக் கொஞ்சமாவது விட்டு வைங்க'' என்று சிரித்துக் கொண்டே டெலிபோனை வைத்து விட்டார்.

கணேஷ் சற்று நேரம் ரிசீவரைப் பார்த்து விட்டு வைத்தான். வஸந்துக்காகக் காத்திருந்தான். இப்போதைக்கு வருவான் போலத் தெரியவில்லை. கேஸ் கட்டை மறுபடி பார்த்தான். எண்ணம் அதில் செல்லவில்லை. ஒன்றையே சுற்றியது. காகிதம்! காகிதம்—ஒன்று! காகித உற்பத்திக்கும் ஒன்றுக்கும் என்ன சம்பந்தம்?

கோர்ட்டுக்குச் சென்று ஆஜராகி அந்தச் சிக்கலான வழக்கின் மந்தமான போக்கில் அவன் மேம்போக்காகத்தான் ஈடுபட்டான். உள்ளே ஒன்று உறுத்திக் கொண்டே இருந்தது. சாயங்காலம் நாலரை மணி வரைக்கும் வஸந்த் வரவில்லை. கணேஷுக்குப் பதற்றம் தான் அதிகரித்தது. கோர்ட்டை விட்டு மீண்டும் அலுவலக அறைக்கு வந்த மாத்திரத்தில் பேராசிரியர் அப்பாதுரையும், அவர் மகள் இனியாவும் வந்து சேர்ந்தார்கள்.

''கணேஷ்! ஒரு முக்கியமான விஷயம்!''

''என்ன ஸார்?''

பேராசிரியரின் முகம் சற்றுச் சுருங்கிக் கவலையுடன் இருந்தது தெரிந்தது.

''எனக்கு ஆதாரமா ஒரு சந்தேகம் கிளம்பியிருக்கு.''

''என்ன சந்தேகம் ஸார்?''

என்ன சந்தேகம் என்று சொல்லாமல் பேராசிரியர் சிந்தனை வயப்பட்டு இருந்தார். ''சே! எப்படிச் சாத்தியம் இது!'' என்றார்.

கணேஷ் இனியாவைக் கேள்விக் குறியுடன் பார்த்தான்.

''மறுபடி உக்கல் போகணும்கிறார்.''

''வேண்டாம். நானும் வஸந்தும் போகப் போறதா இருக்கோம். என்ன வேணும் சொல்லுங்க.''

''நீங்க போகப் போறீங்களா? அப்ப நாங்களும் வரோம்!''

''இனியாவுமா?''

''ஆமா!''

''இந்தச் சமயத்தில அங்கே வர்றது சரியில்லே இனியா. அந்த இடத்தில விநோதமான காரியங்கள் எல்லாம் நடக்குது.''

''இல்லே கணேஷ்! நான் அங்க போயே ஆகணும். இல்லேன்னா எனக்குத் தலை வெடிச்சுப் போயிரும். அவ்வளவு முக்கியமான ஜோலி எனக்கு'' என்றார் பேராசிரியர்.

''உக்கல்ல எங்க?''

''ராஜ ராஜன் கிணற்றில.''

''சரிதான். நீங்களும் கிணத்தை இன்னும் விடலியா?'' என்று வஸந்த் உள்ளே நுழைந்தான்.

''ஹலோ இனியா! ரகசிய ராத்திரிப் புத்தகமே! எப்படி இருக்கிறே? எல்லாரும் நலமா? அமெரிக்கா மாப்பிள்ளை நலமா?''

''ஏய், போன காரியம் என்ன ஆச்சு?''

''பாஸ் கிடைச்சிருச்சு! அந்த ஆர்ட்டிக்கின் பேரறிஞர் அன்னு டெக்னாலஜிக்கல் பல்கலைக் கழகத்தில்....''



குழந்தைக்கு 3 மாதமாகும்போது, பால் மட்டும் போதாது

# உங்கள் குழந்தைக்குத் தேவை ஃபாரெக்ஸ்

குழந்தையின் உன்னத திட உணவு

**3-ஆம் மாதம்—திட உணவு துவங்கும் காலம்.**

3 மாதம் ஆனபின், குழந்தையின் வளர்ச்சிக்குப் பால் மட்டும் போதாது. குழந்தை சுறுசுறுப்பாயும் விரைந்தும் வளரும் சமயம்—பாலில் கிடைப்பதைவிட அதிக கலோரிகள் தேவை. குழந்தைக்கு திரவ உணவைக் குறைக்கும் வகையிலும் அதிக கலோரிகளை வழங்கவும் மென்றுத் தின்னப் பழகவும் திட உணவு தேவை.

**3-ஆம் மாதம் அதிக இரும்புச் சத்து தேவை**

பிறந்த 2-4 மாதங்கள்தான் குழந்தைக்குத் திட உணவு துவங்க சிறந்த சமயம். பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச்சத்து அடங்கிய திட உணவுத்தேவைப் படுகிறது.

—Dr. Subhash C. Arya
"Infant & Childcare for the Indian mother"

**ஏன் டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபார்சு செய்கிறார்கள்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது—ஃபாரெக்ஸ். இதில் புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, கால்ஷியம், பாஸ்பரஸ், மற்றும் வைட்டமின்கள் உள்ளன. இரும்புச் சத்தும் அதிகமுள்ளது—ஃபாரெக்ஸ். ஆகவே, குழந்தையின் விரைந்த முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவாகிறது—ஃபாரெக்ஸ்.

இலவசம்! குழந்தையின் முதலாண்டு புத்தகத்திற்கு, தபால் தலையுடன் 50 பைசா எழுதுங்கள்.
த.பெ. எண் 19119.
பம்பாய்-400025.






டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்
குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு

CASGLF-10-203 TAM

## கார்ட்டூனிஸ்டுகள் கண்ணோட்டம்

சென்ற வருடம் எம். ஜி. ஆர். மீண்டும் ஆட்சிக்கு வந்தார். இந்நிலையில் அவரது ஆட்சியைத் திறனாய்வு செய்ய ஆறு பிரபல கார்ட்டூனிஸ்டுகளைக் கேட்டுக்கொண்டோம்.

அவர்கள் வரைந்துள்ள கார்ட்டூனுக்கு நான் விளக்கம் கேட்டபோது:

**திரு செல்லப்பன் (முரசொலி)**

எம். ஜி. ஆர். ஆட்சியில் அவரது மது விலக்குக் கொள்கைதான் என்னைக் கவர்ந்தது. சிரிப்புத்தான் போங்கள். முதலில் மது விலக்கைக் கொண்டு வருவதாகச் சொல்லிப் பின்பு அவர் பல்டி அடித்ததைத்தான் சொல்கிறேன். எனது இந்த எண்ணத்தின் விளைவே இந்தக் கார்ட்டூன்.

**திரு. முரளி (துக்ளக்)**

இந்த ஒரு வருடத்தில், எம். ஜி. ஆர். ஆட்சி கவிழ்ந்து விடும் என்று இந்திரா காங்கிரசும் தி. மு. க.வும் தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகிறார்கள். இந்த எண்ணம் தான் என் கார்ட்டூனுக்குக் காரணம்.

**திரு. பீட்டர் (தினமணி கதிர்)**

எம். ஜி. ஆரின் தலைநகர் மாற்றும் எண்ணம்தான் எனக்கு விசித்திரமாக இருக்கிறது. இது நாட்டு நலன் விரும்பும் எவராலும் ஏற்றுக்கொள்ள முடியுமா?

**திரு. நடனம் (பல பத்திரிகைகள்)**

எனது கண்ணோட்டத்தில் எம். ஜி. ஆர். பல புதிய அரிய திட்டங்களாலும், சேவை மனப்பான்மையாலும் மக்களைக் கவர்ந்தவர். இவரை நான் 'சூப்பர்மேன்' என்று அழைக்கிறேன்!

**திரு. ரவி (மக்கள் குரல்).**

எந்த ஒரு கொள்கையிலும் நிலையாக நிற்க முடியாமல் தடுமாறுகிறார் எம். ஜி. ஆர். மதுவிலக்கு சமாசாரம் ஒன்று போதாதா?

**திரு. உமாபதி (பல பத்திரிகைகள்)**

எந்தக் கட்சி ஆட்சி புரிந்தாலும் தவறு செய்யாதிருந்ததில்லை. ஆனால் மக்களிடம் தமக்கு மங்காத செல்வாக்கு இருப்பதாகக் கூறிக்கொள்ளும் அ.தி.மு.க. அரசு, உள்ளாட்சித் தேர்தலையே வரை முறையற்று மீண்டும் மீண்டும் ஏன் ஒத்திப் போடவேண்டும்? வெட்கப்படாமல் கண்துடைப்பு சமாதானங்களை ஏன் கூறி வரவேண்டும்? ஜனநாயக ஆட்சி முறையையே நோய்வாய்ப் படுத்தும் செயல் அல்லவா இது?

- கட்சித்தாவல் தடுப்புச்சட்டம் —
  பேச்சுடன் நிற்கிறது!
- வனஸ்பதிக்கு வர்ணம் கொடுப்பது -
  பேச்சுடன் நிற்கிறது!
- இந்த உள்ளாட்சித் தேர்தலும்...
  பேச்சுடன் நின்று விடுமோ?

பேட்டி: சிக்கி

"வஸந்த்! தி ஆர்ட்டிக்கிள் ப்ளீஸ்! அந்த யூனிவர்சிட்டி பெயரைச் சொல்லி முடிக்கிறதுக்குள்ளப் பொழுது விடிஞ்சுடும்!"

"நானும் வந்தே ஆகணும்" என்றார் பேராசிரியர்.

"அழைச்சுண்டு போறோம் ஸார்! கவலைப் படாதிங்க."

"ஆமா, நீங்க எதுக்கு உக்கலுக்கு வரணும்?"

"எனக்கு அந்தக் கல்வெட்டைப் பார்த்தாகணும்!"

"எதுக்கு ஸார் இந்த வயசான காலத்தில? உங்க டாட்டரை மட்டும் அனுப்பிவைங்க. நல்லா காமிச்சு அனுப்பறேன்!"

"அவளுக்குத் தெரியாது. நான் வந்தே ஆகணும். இது என் தன்மானப் பிரச்னை!"

"நீங்க என்ன சொல்றீங்கன்னு புரியறது சிரமமாயிருக்கு. ஆனா அதுக்கு இப்ப அவகாசம் இல்லே. என்ன பாஸ்?"

கணேஷ் அந்த ஆராய்ச்சிக் கட்டுரையைப் படித்துக் கொண்டிருக்க அவன் முகம் திடீரென்று பிரகாசமடைவது தெரிந்தது.

"என்ன பாஸ்! பளிச்சுனு பல்பு போட்டீங்க!"

"வஸந்த்!"

"என்ன பாஸ்?"

"வஸந்த்!!!"

"என்ன பாஸ் பக்கத்திலயே இருக்கேன்! என்னது உங்க முகத்தைப் பார்த்தா கியூ இல்லாம கிருஷ்ணாயில் கிடைச்சவன் மூஞ்சி மாதிரி டாலடிக்குது. என்ன கண்டுபிடிச்சிங்க?"

"வஸந்த் எல்லாம் இப்ப சக்குனு பொருந்துது. எல்லாம் — எல்லாம்!"

"நான் போய்ப் பார்த்தே ஆகணும்."

"ஸார்! கொஞ்சம் சும்மா இருக்கீங்களா. ஒரு தடவை சொல்லியாச்சல்ல உங்களையும் அழைச்சுக்கிட்டுப் போறோம்னுட்டு. திருப்பித் திருப்பி அதையே ஹிந்துஸ்தானி சங்கீதம் மாதிரி பாடிக்கிட்டு இருக்கீங்களே பாஸ் என்ன சொல்றீங்க? சரியாச் சொல்லுங்க!"

"அவங்கள்ளாம் சேர்ந்துண்டு என்ன செய்யறாங்கன்னு தெரிஞ்சு போச்சு வஸந்த்! சந்தேகமே இல்லாமத் தெளிவாத் தெரிஞ்சு போச்சு. முதல்ல இருந்து எல்லாம் பொருந்துது! முதல் கத்திக் குத்து. அந்தப் பார்ஸல்! பத்துக்கு நாப்பது வியாபாரம்! சதாசிவம்! போலீஸ் ஸ்டேஷன் வழக்குகள், பஸ்ஸ்டாண்டில ஸாம்பிள் கேட்கப்பட்டுப் பொட்டியை இழந்த தஞ்சாவூர்க்காரர்... ஏன் அந்த நூறு ரூபா நோட்டை ரோட்டில கண்டெடுத்த கேஸ், எல்லாமே பொருந்தறது. வஸந்த் உனக்குத் தெரியலே? ரொம்ப சிம்பிள்."

"என்ன பாஸ் கிண்டலா பண்றீங்க! ஒரு எழவும் தெரியலே! சொல்லுங்க."

"கணேஷ்! நான் உக்கலுக்குப் போயே ஆகணும்."

"போலாம்... போலாம்... எல்லாரும் போலாம் ஸார்! இந்த விநோத விவகாரத்தின் கடைசிக் காட்சி உக்கல்ல அந்தக் கிணத்துக்குப் பக்கத்திலே நடக்கப் போறது!" என்றான் கணேஷ்.

(தொடரும்)

# டைரக்டர் குண்டப்பா!

குண்டப்பா : ''ஒத்துழைக்கவே மாட்டேங்கிறாங்க!''

நண்பர் : ''யாருங்க..?''

குண்டப்பா : ''இந்தத் தியேட்டர் காரங்கதான்! என் படம் எது ரிலிஸானாலும் இரண்டாம் நாளே தியேட்டரை விட்டுத் தூக்கிடறாங்க!''

●

நண்பர் : ''எதுக்கு நீங்க டைரக்ட் செய்ற படங்களிலெல்லாம் ஏதாவது ஒரு சீனில் தலையைக் காட்டிடறீங்க.?''

குண்டப்பா : ''தென்னாட்டு ஹிட்சாக்னு பெயர் வாங்கத்தான்!''

●

அவர் : ''உங்க சொந்தப்படத்தை நீங்களே டைரக்ட் செய்யாமல் வேறு ஆளைப் போட்டிருக்கீங்களே ஏன்?''

குண்டப்பா : ''என் படம் வெற்றிப் படமா அமையணும்னு நான் ஆசைப்படறது ஒரு தப்பா.?!''

குண்டப்பா : ''கழுதை கெட்டால்னு என் படத்துக்கு நான் பெயர் வச்சிருக்கக் கூடாது!''

மனைவி : ''ஏங்க...?''

குண்டப்பா : ''குட்டிச்சுவர்னு என் படத்தைப் பற்றி எல்லாப் பத்திரிகைக் காரங்களும் விமரிசனம் எழுதிட்டாங்க!''

●



அவர் : ''பத்துத் தலைராகம்ங்கிற பெயரில் நீங்க எடுக்கிறது என்ன சப்ஜெக்ட்?''

குண்டப்பா : ''சீதையின் மீது ராவணன் கொண்ட காதலைத் தெரிவிக்கிற ராமாயணக் கதையைத்தான் அந்தப் பெயரில் எடுத்துக்கிட்டிருக்கேன்!''

●



குண்டப்பா : ''தொடர்ந்து என் படங்கள் டப்பாவுக்குள் ஓடுவதன் காரணத்தைக் கண்டுபிடிச்சிட்டேன்!''

மனைவி : ''என்ன அது..?''

குண்டப்பா : ''குண்டப்பா என்கிற பெயரிலேயே டப்பா வருவதுதான் காரணம்!''

— உ. ராஜாஜி




அக்கினியே நீ
மெதுவாய் எரி உன்
அணைப்பில் கிடக்கும்
அந்த இருவரும்
பட்டினித் தீயில்
பாதி எரிந்தவர்!.....
தஞ்சை யின்புகழ்
தஞ்சையால் மட்டுமா?
பஞ்சைய ருக்கும்
பங்கதில் உண்டு.
கீழ வாசல்—
கீர்த்தியின் பிறப்பிடம்
அர்ச்சகர் ஒருவரால்
அரும்புகழ் பெற்றது!
அவர் யார்?

'திருவிளை யாடல்'
தினம் நடத் துவதை.
தெய்வங்கள் எல்லாம்
மறந்து போனதால்
வறுமை உருவத்தில்
மரணமே ஆடிய
'தெருவிளை யாடல்'
கண்டு களித்தவர்!

தரித்திரத்தில் தொடங்கிய
தனது குடும்பத்தின்
சரித்திரத் தை இரு
கயிற்றிலே முடித்தவர்!
தவறு!
பட்டினி யின்எடை
எவ்வள வென்று
கயிற்றில் கட்டியே
கணக்குப் பார்த்தவர்!
அவரொடு பேசலாம்?
''ஐயரே வணக்கம்!
தங்கத் தட்டிலே
குழந்தையை வைத்துத்
தராசு முள்ளினால்
எடைநிர் ணயிக்கும்
எங்கள் பாரத
மணித்திரு நாட்டில்
சுருக்குக் கயிற்றிலே
மகன்எடை பார்க்கும்
சுருக்கு வழியை
எவரிடம் கற்றீர்?
சாத்திரம் சொன்னதா?
எங்கள் மீதிருந்த
ஆத்திரம் சொன்னதா?
ஐயரே! சொல்லுவீர்!
தருமத்தை அறிந்த
தாங்களா, இப்படிக்
கருமத்தைப் பெருக்கினீர்?
கலியின் கொடுமை?''

எரிச்ச லுற்ற
ஐயர் இயம்பினார்:
''தருமத்தின் நிர்ணயம்
தேவைக ளால்தான்
செயப்படு கிறது!
இந்த நாட்டில்
மானுட தர்மம்
இன்னும் எழுதப்
படவே இல்லை.''

''உங்களைப் பற்றி
ஒருசில வார்த்தை....''
''நான்,
வாழும் போதே
செத்துப் போனவன்!
செத்துப் போவதால்
வாழ நினைத்தவன்!''
''அதாவது....''
''சாவின் முத்தங்கள்
தவணையிலே வருமானால்
அதன்பெயர் பட்டினி!
மொத்தமாய்க் கிடைத்தால்,
சிவலோக பதவி!
எப்படி விளக்கம்?''

''மன்னிக்க வேண்டும்
மறையவ ரேநீர்
இப்போ திருப்பது
எவ்விடம்? அந்தப்
பரம பதமா?
பைசாச லோகமா?''

பைசாச லோகம்!''
(பயங்கரச் சிரிப்பு)
''பேய்களின் மத்தியில்
வாழ்ந்துகொண் டிருந்தேன்;
பிசாசுடன் வாழ்கிறேன்
இரண்டும் ஒன்றுதான்!''
''தன்ஆத் மாவைத்
தானே அழிப்பது,
மன்னிக்க முடியாத
மாபெரும் தவறு!''
''ஆத்மாவே இல்லாத
நாட்டில், எனக்கொரு
ஆத்மா இருந்ததே
மாபெரும் தவறு!''

''ஓகோ?''
''நட்சத்திரச் சோற்றை
நிலாத்தட்டில் பரிமாறும்
கற்பனை படைத்த
காகிதப் புலியே!
கவனமாய் இதைக்கேள்!
கேளடா கேள்!நான்
கடத்திய நாளெல்லாம்
வாளடா வாள்!அடி
வயிற்றை அறுத்தன!
'இனிக்கும் இளமை' —
என்மகன் பசியால்
மயக்கம் அடைந்த
நாட்களை எண்ணினேன்;
இளமை யூஞ்சல்
ஆடட்டும் என்றுதான்,
ஆசையி னாலே
கயிற்றில் மாட்டினேன்;
அடுத்த கயிற்றில்
நானும் தொங்கினேன்!''

'சரிசரி, வருகிறேன்''
(நகரத் தொடங்கினேன்)
''நில்லடா! நமக்குள்
நிகழ்ந்த இவற்றை,
என்ன தலைப்பில்
எப்படிக் கொடுப்பாய்?''
''பிணத்துடன் பேட்டி!
வரட்டுமா? வணக்கம்!''.

[தஞ்சை அருகே சில மாதங்களுக்கு முன்னர், ஒரு அர்ச்சகர் வறுமை காரணமாய்த் தம் குழந்தையையும் கொன்று தாமும் தற்கொலை செய்து கொண்ட உண்மை நிகழ்ச்சியின் வேதனையில் பிறந்த கவிதை.]



# நெல்லிக்கனி

● கதையில் புதுமையாக ஒன்றும் இல்லா விட்டாலும் சிறிதும் தொய்வில்லாமல் படத்தைக் கொண்டு போயிருக்கும் டைரக்டர் கல்யாணம் பாராட்டுக்குரியவர். 'நீயின்றி நானில்லை' என்று உயிருக்குயிராய் பால்யத்திலிருந்தே பழகியவர்கள் ராமுவும், சங்கரும். ஒருவன் பணக்காரன் மற்றவன் அனாதை. அசடு, அப்பாவி எல்லாமான சங்கருக்கு நேர் எதிர் ராமு. தைரியசாலி, மோட்டார் சைக்கிள் வீரன் சர்க்கஸில் சாகஸம் தொழில். தன்னையறியாமலேயே அசடு தன் மௌனக் காதலியை நண்பனுக்குத் தாரை வார்க்கிறான். கல்யாணம் நிச்சயமான பிறகு உண்மையறிந்த ராமு சங்கருக்கு விட்டுக் கொடுக்க, அவர் மறுக்க தியாகங்கள் போட்டி. ராமு தன்னையே வெடிவைத்து மாய்த்துக் கொண்டு காதலரை இணைக்கிறான். நியாயமாய் இல்லை முடிவு.
தேங்காய் — மனோரமா காமெடி உண்மையில் ரிலீஃப் தருகிறது. பட்டாஸ் வெடியில் ஜகா வாங்கும் குதிரை, மாப்பிள்ளையைக் குப்பைத் தொட்டியில் தள்ளும்போது இயல்பாய் வருவது சிரிப்பு.
கிடைத்த ஓரிரண்டு காட்சிகளிலும் மின்னத் தெரிந்தவர் பூர்ணம். தாட்டியான உடம்புடன் அநாவசியமாய் வாக்கிங் ஸ்டிக்குடன் அலைபவர் ஏ.ஆர்.எஸ்.
புது முகம் ஸ்வப்னா அழகுதான். ஆனால் அது 'மாயமோ' என்று பயமுறுத்தின சில குளோஸப்கள்.
டப்பாங்குத்து இரண்டையும், கேட்கும்படி ஒரு பாடலையும் தந்திருப்பவர்கள் சங்கர் — கணேஷ்.
திருப்தியான அம்சம் பாஸ்கர் ராவின் ஒளிப்பதிவு. —''சிந்து-ஜீவா''

● கல்லூரியில் இந்து டீச்சர்! கிராமத்தில் காதலன் பாலனோடு களியாட்டம்! இந்துவின் அச்சனே இந்தக் களியாட்டங்களுக்கு, காதலுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறான்! இழந்த காதலில், அச்சன் மீதுள்ள ஆத்திரத்தில் டீச்சர் இந்து நிலைதடுமாறுகிறாள்! ஆம்! அவள் திரஸ்கரித்த மாணவர் தலைவன் வினோத் காதலை அவள் ஏற்றுக் கொள்கிறாள்! அதுவும் ஈடேறிற்றா? ஊஹூம்! இரு மாணவ தலைவர்களின் கோஷ்டிச் சண்டையில் வினோத் பலியாகிறான்! டீச்சர் இந்து 'தனிமரமாக'த் தவித்து உருகுகிறாள்!

கதை—சாதாரணம். ஆனால் நடிப்பு அசாதாரணம்!

ஜரினா வஹாப் அழகுத் தேவதையாக, டீச்சர் இந்துவாக, காதல் களியாட்டங்களில் சொக்க வைக்கிறார்! அவளது காதலன் பாலனாக நடிக்கும் ரபீஷ் அலட்டிக்காமல் அவளுக்கு ஈடு தருகிறார்!

அப்பாவி மாணவர் தலைவன் வினோத்! டீச்சர் மீதுள்ள காதலைத் தெரிவிக்க வினோத் படும் பாடு! பிரதாப் போத்தன் அப்பாவித் தனத்தில் உயர்ந்து நிற்கிறார். கல்லூரி காம்பவுண்டில் அத்தனை பெண்கள் மத்தியில் ஆடை குறைப்புக் காட்சி அவசியம்தானா?



மலையாளப் படத்தில் அழகு கொலுவிருக்கும் காட்சிகளுக்குப் பஞ்சமேது? டைரக்டர் பரதன் ஒரு பெண்ணின் அவல வாழ்வைத் திறம்படச் சித்திரிப்பதில் கண்ணும் கருத்துமாக ஈடுபட்டிருக்கிறார்! இந்தப் படம் ஐந்து ராஜ்யப் பரிசுகளைப் பெற்றதில் அதிசயமில்லை!
—பி.எஸ்.எம்.

# சாமரம்

# நவக்கிரஹநாயகி

நவகிரகங்களும் மக்களின் தலைவிதியை நிர்ணயம் செய்கின்றன எனில் அந்த நவ கிரகங்களுக்கும் மேலாக அகிலாண்டநாயகியாக விளங்குகிறாள் தேவி கருமாரி அம்மன். சூரியன் சந்திரன் போன்ற அனைத்து கிரகங்களும் அவளை வணங்கியே தங்கள் கடமைகளை ஆற்றுகின்றன. இந்த உயர்ந்த கருத்தைப் புராணக் கதைகள் மூலம் கூற வந்ததுதான் ''நவகிரஹ நாயகி'' நாடகம்.

காஞ்சி ரங்கமணி நாரதராகவும் ரேணுகா தேவி கருமாரியாகவும் தோன்றுகின்றனர்.

பெரிய பெரிய செட்டுக்களையும் பளபளக்கும் ஆடை ஆபரணங்களையும் கொண்டிருக்கும் நாடகத்துக்குத் தேவைப்படுபவை: கதை சொல்லும் திறன், கவர்ந்திழுக்கும் வசனங்கள், நடிப்பாற்றலை விகசிக்கச் செய்யும் டைரக்ஷன். இவற்றில் கவனம் செலுத்தித் திருத்தி அமைத்தால் அழகிரி நாடக மன்றம் எதிர்பார்க்கின்ற வெற்றி கிடைக்கும். விமர்சனம் வெற்றிக்குத் துணை நிற்கலாம்; தேடித் தராது!

— குட்டி கிருஷ்ணன்

# கன்னித்தீவு

கன்னித்தீவு — அப்பாவிடம் முன்கதை கேட்டுப்படிக்க ஆரம்பித்தவர்கள் தம் பிள்ளைகளுக்கும் முன்கதை சொல்வார்கள். தினத் தந்தியில் வரும் மார்கண்டேயக் கதை. ஆனால் இது அந்தக் கன்னித்தீவு இல்லை. நவீனக் கன்னித்தீவு. நவீன சிந்துபாத் ஜெய்சங்கர்.

படத்தில் கடத்தல் வில்லன் — தீவின் பழங்குடியினரைச் சாமி பூதம் என்று பய முறுத்தி ஆள்கிறான். நம் படாதிபர்கள் கன்னி பலி, ஜலக்கிரீடை என்று கப்ஸா விட்டு நம் மையாள்கிறார்கள். ஜெய், குளிர்ச்சியாய் ராதிகா, கூடவே வெ. மூர்த்தி தலைமையில் ஒரு கெக்கே பிக்கே கூட்டம் — இவை கன்னித்தீவு மர்மம் காணச் செல்கின்றன.

திடீரென்று செடி கொடிகள் ஆளைச் சுற்றி வளைத்துக் கொள்கின்றன. நாய் எரிந்து மறைகிறது — மாயாஜாலம். மின்சார சிலந்தி பெண்ணை மட்டும் தூக்கிச் செல்கிறது. ஊசி போட்டால் உருவம் அருவமாகிறது — எலக்ட்ரானிக்ஸ்.

விட்டலாச்சாரியா பாணியும், ஆங்கில சயின்ஸ் ஃபிக்ஷனும் கலப்பு மணம் புரிந்து பெற்ற ஆரோக்கியமில்லாத குழந்தை இப் படம்.

படத்தில் நிறைய 'அழகி'கள் வருவதால் இளைஞர்கள் மொய்க்கிறார்கள். அரை டிக்கட்டுகள் ஜோராகக் கைதட்ட வாகாக கேலிக் கூத்துச் சண்டைகள்.

சீமாவின் குளியல் காட்சிகள் அனைவருக்கும் (ஐ.வி. சசி தவிர) நல்ல விருந்து. விவரம் புரியாமல் வந்துவிட்ட ரஞ்சித் ஹிந்திக்குப் போய் விடுவதே மேல்.

படம் முடிந்து வெளியே வருகையில் நம்மிடம் ஏதோ இல்லாத உணர்வு. ஏதோ குறையும்உணர்வு. அட..... நம்மிடம்காதையே காணோம். அவ்வளவு குத்தியிருக்கிறார்கள்.

—நளினி சாஸ்திரி

# ஒரு பிடி அவல்!




● அண்ணாசாலையில் சென்று கொண்டிருந்த ஓர் ஆட்டோவின் பின்புறம் 'லவ்–பஸ்' என்று கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது. ஆட்டோவில் செல்லும் போது சில இளசுகள் செய்கின்ற குறும்புகளை – கொஞ்சல்களைக் கண்ட பின்பு, டிரைவர் இப்படியொரு பெயரைத் தன் ஆட்டோவிற்குச் சூட்டியிருப்பாரோ?

● நண்பர் ஒருவர் வீட்டின் சுவரில் காணப்பட்ட வாசகம் .....

A friend is,
A push when you have stopped,
A word when you are lonely,
A guide when you are searching,
A Smile when you are sad
A song when you are glad"



● ஏ.வி.எம். ராஜேஸ்வரி திரையரங்கில் குழந்தைகளுக்கான விளையாட்டுப் பூங்கா அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் பூங்கா மணலில் உட்கார்ந்திருப்பவர்கள் பெரும்பாலும் பெரியவர்களே!

● கடற்கரை காந்தி சிலையின் பின்புறம் அண்மையில் புனிதமடைந்திருக்கிறது. ஆம். சிலையின் பின்புறம் ஒளிபிக்க குழல் விளக்குகளைப் பொருத்தியிருப்பதால் 'ஜோடி'கள் இப்போது காந்தி சிலையின் பின்புறம் காதல் புரிய வருவதில்லை.

● வில்லிவாக்கம் அருகே அமைந்த புதிய குடியிருப்பு ஒன்றில் – ஒவ்வொரு வீட்டிற்கும் போலீஸ் விசில் அளிக்கப்பட்டுள்ளது. யார் வீட்டிலாவது திருடன் வந்தால் உடனே விசிலை ஊத வேண்டுமென்பது ஏற்பாடு. இந்த ஏற்பாடு நல்ல பலனைக் கொடுத்து வருகிறதாம்.



● இலக்கணம், இலக்கியம் பற்றிய கேள்விகளுக்கு விடை அளிப்பவர் கி. வா. ஜ. அதே வேளை, செக்ஸ் மற்றும் ஆபாசம் பற்றிய கேள்விகளுக்கும் தன்னால் விடையளிக்க முடியும் என்பதை அண்மையில் வானொலி நிலையத்தில் நடந்த 'நிலா முற்றம்' நிகழ்ச்சியில் நிரூபித்தார் அவர்.

● சென்னை வானொலி நிலையத்திலுள்ள குளிர்நீர் அமைப்பு அருகே 'டம்ளர்' வைக்கக் கூடாதா என்று சில இதழ்களுக்கு முன்பு குறைப்பட்டிருந்தோம். ஆனால் இப்போதோ.. நாடகப் பிரிவு அருகே இருந்த குளிர்நீர் அமைப்பையே பெயர்த்து எடுத்து விட்டார்கள்.

—தொகுப்பு: யெம்ஜி





பாரதி, சுதந்திரம் பெற்ற இந்தியா, சாதிகளற்றதாக சமயப் பகைமையற்றதாக — உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்யக் கூடியதாக — உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வதாக — மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையற்றதாக உள்ள புதிய சமுதாயத்தைப் படைக்கும் என்று நம்பினார். இந்த நம்பிக்கையை 'நிகழ்கின்ற இந்துஸ்தானமும் வருகின்ற இந்துஸ்தானமும்' என்ற பாடலிலே வெளிப்படுத்துகிறார். 'போ, போ, போ!' என்று மும்முறை கூறி, பழைய பாரதத்தைப் பிடரியிலடித்து விரட்டுகிறார் 'வா, வா, வா!' என்று மும்முறை கூறி, தம் கற்பனையிலுள்ள புதிய பாரதத்தை மனமுவந்து வரவேற்கிறார். 'நிகழ்கின்ற இந்துஸ்தானம் என்னும் பகுதிக்கு 'போகின்ற பாரதத்தைச் சபித்தல்' என்று துணைத் தலைப்பும் தந்திருக்கிறார்.

பாரதியின் பார்வையிலே ஒரு புரட்சியைக் காண்கிறோம். ஓராயிரம் வருடம் எவனெவனோவெல்லாம் ஆளப்பட்டு வலுவிழந்து, பொலிவிழந்து, பண்டைப் பெருமைகளை

# பாரதி கண்ட புதிய பாரதம்



எல்லாம் இழந்து உருக்குலைந்து போன பழைய பாரதத்தைச் சபிக்கிறார். 'நீ ஒழிந்து போ, போ, போ!' என்று விரட்டுகிறார். ஆம்; பழைய பாரதத்தைத் திருத்தி, புதிய பாரதம் படைக்க அவர் விரும்பவில்லை.. அது, திருத்திப் புதுப்பிக்க முடியாதபடி கெட்டுப் போய் விட்டதென்று பாரதி கருதுகிறார். சாதி வேறுபாடுகளோடு — சமய விரோதங்களோடு — பொருளாதாரச் சுரண்டல்களோடு — அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என்று சொல்லும் அறியாமையோடு — தெய்வம் பலப்பல சொல்லும் மூட பக்தியோடு — தாய் மொழியைப் புறக்கணித்து வேறு வேறு மொழிகளைக் கற்கின்ற பரங்கி மொழிப் பக்தர்களோடு சமரசம் செய்து கொள்ள பாரதி விரும்பவில்லை. அந்த சமரசத்திலே ஒரு புதிய பாரதத்தை அவன் கற்பனை செய்து பார்க்கவில்லை. பழையதீமைகளைஅடியோடு கட்டுப்போக்கி நாடு அடிமைப்பட்டிருந்த காலத்தில் வல்லான் வகுத்தது வாய்க்கால் என்னும் போக்கில் வளர்ந்திருந்த ஆதிக்கச் சக்திகளை வேரும் வேரடி மண்ணும் இல்லாமல் வீழ்த்தி, புதிய பாரதத்தைப் படைக்க விரும்பினான். தான் விரும்பும் அந்தப் பாரதத்தைத்தான் நாடு சுதந்திரம் பெறும் போதுள்ள தலைவர்கள் படைப்பார்கள் என்றும் கனவு கண்டான் அந்தச் சமுதாயப் புரட்சிவாதி.

நிகழ்கின்ற இந்துஸ்தானமும் வருகின்ற இந்துஸ்தானமும் என்ற பாடல்கள் இரண்டு பக்கங்கள் கொண்ட ஒரு நாணயம் போன்றது. இப்படி ஒரு பாடலைத் தமிழ்க் கவிஞர்களிலே எவரும் பாடியதே இல்லை.

(மயிலை இலக்கிய வட்டம், பாரதிய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course, Road, Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran





ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

புதிய

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

## காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.




**கிராம்புத் தைலம் கொண்ட ப்ராமிஸ் டூத் பவுடர் அளிக்கும் நன்மையைப் பாருங்கள்.**

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத தைலத்தின் இணையற்ற சுவை.

பல்சாரா

கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற **ப்ராமிஸ்** டூத் பவுடர்

CHAITRA-BLS-438 TAM

